


உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின்
திங்கள் தமிழ்த் தாள்

மலர் : முப்பத்திரண்டு

1959




பத்திராசிரியர் :

புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் :

மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

உள்ளுறை


| பொருள் கட்டுரையாளர் | பக்க எண் |
|---|---|
| அப்பர் அருள்மொழி—வித்வான்-சிவ. மீனாட்சி சுந்தர சிவை | 217, 239 |
| அப்பர் கரையேறிய திருக்குளத் திருப்பணி—அப்பர் திருப்பணிக் குழுவினர் | 248, 344 |
| " அப்பரைப்பற்றிய ஓர் ஆய்வுரை "—புலவர்-முருக வேள், எம்.ஏ., எம்.ஓ.எல். | ... 385 |
| அளவை இயல்—புலவர்-முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல். | 161, 257, 289, 321 |
| அறனும் அன்பும்—முரு. பழ. இரத்தினம் செட்டியார் | 361 |
| ஆசிமொழி—ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் | ... 76 |
| உண்மை விளக்கம்—ஸ்ரீலஸ்ரீ சம்பந்த சரணாலயத் தம்பிரான் சுவாமிகள் | ... 37 |
| எட்டும் இரண்டும்—வித்துவான்-அம்பை-சங்கரனார் | ... 331 |
| ஒரு பழம் பாடலின் உருவம்—முதுபெரும் புலவர்-முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் | ... 152 |
| கந்தரனுபூதி—மா. ப. தியாகராசன், பி.ஏ. | 180, 213, 336 |
| குடம்பையும் புள்ளும்—பி. கிருஷ்ணசாமி | ... 373 |
| குடும்பக் கூட்டு வழிபாடு—வித்துவான் - அம்பை - சங்கரனார் | ... 173 |
| கூத்தன் கூத்து—வித்துவான்-அ. சண்முகசுந்தரம், பி.ஏ. | 250, 272 |
| சதுரர் யார் ?—திருநாவுக்கரசு தேசிகர் | ... 146 |
| சமாஜ ஆண்டு விழா—நே. த. கிருஷ்ணசாமி, பி.ஏ., பி.டி. | ... 121 |
| சமாஜத் தேர்வுகள் | ... 119 |
| சமாஜ மாநாட்டுப் பெருவிண்ணப்பம்—இராவ்சாகிப்-நல். முருகேச முதலியார், பி.ஏ. | ... 417 |
| சமாஜ விழாவும் வேண்டுகோளும்—புலவர் முருக வேள், எம்.ஏ., எம்.ஓ.எல். | ... 35 |
| " சித்தாந்த சிகாமணி"க்குப் பாராட்டு | ... 156 |
| சித்தாந்த வகுப்புக்கள்—புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல். | ... 89 |
| சிவஞான-சுவாமிகள்— ,, | ... 129 |

| பொருள் | கட்டுரையாளர் | பக்க எண் |
|---|---|---|


சிவன் என் மருத்துவன்—கவியரசு கு. நடேசகவுண்டர் 225
சிவாகமப் பரிபாலனம்—மு. கிருஷ்ணசாமி முதலியார் 209
செய்திகள் 284, 350, 382
சேக்கிழார் திருவாக்குண்மை—வி எ. ஆத்மாராம் நாயுடு 342
" " —ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர் 56
சேக்கிழார் விளக்கும் செம்பொருள்—இளஞ்சைவப் புலவர்-எஸ். ஆர். தேமொழி 267
சேவற் கொடி—வித்துவான்-க. சம்பந்தன் 363
சைவ இளைஞர் மாநாட்டுத் தலைமையுரை—வித்துவான்-அடிகளாசிரியர் 26
சைவ சமயத் தெளிவு - இளைஞருக்கு—தி. கி. நாராயணசாமி 281, 309
சைவத் தேர்வு வினுக்கள்—1959 ... 410
சைவ மங்கையர் மாநாட்டுத் தலைமையுரை—வித்துவான்-ந. மங்கையர்க்கரசி அம்மையார் ... 17
ஞான ரச வர்தம்—வைத்திய ரத்தின - பு. வே. தேவராஜ முதலியார் 318
ஞானியார் அடிகளின் பேச்சாற்றல்—ம. பொ. சிவஞானம் 203
ஞானியார் சுவாமிகள்—மு. அருணசலம், எம்.எ. 182
தத்துவ விளக்கம்—தி. கி. நாராயணசாமி நாயுடு 97
தமிழுக்கும் சைவத்திற்கும் ஆற்றிய தொண்டு—அருள் தியாகராசர் 403
தலைமையுரை—சித்தாந்த சிகாமணி-க. வச்சிரவேல் முதலியார், பி.எ., எல்.டி. 49
தவம் யாது ?—கோவைகிழார் - சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், பி.எ., பி.எல். 177
திருக்கோவையார்—புலவர் - முருகவேள், எம்.எ., எம்.ஓ.எல். 353
திருநாவுக்கரசர்—மா. ப. தியாகராஜன், பி.எ. 153
"திருநின்ற செம்மை"—புலவர் முருகவேள், எம்.எ., எம்.ஓ.எல். ... 193
திருநெறி விளக்கம் — ... 347
திருவள்ளுவர் நினைவுநாள் நிகழ்ச்சி ... 160
"திருவாசகமணி - சிவபுக்தமணி" ... 224

பொருள் கட்டுரையாளர் பக்க எண்

தோழமை—மா. ப. தியாகராஜ முதலியார், பி.ஏ. ... 278
நல்லோர் நடுவில்—கே. இராமநாதன், பி.ஏ., பி.எல்.... 95
நல்வாழ்வு—வித்துவான் - மா. நடராசன், எம்.ஏ., பி.ஓ.எல். ... 306
பந்தணைநல்லூரில் பரமன் அடியார்கள் ... 418
"பிறந்த நாள்வயிற் பெருமங்கலம்"—புலவர் முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல். ... 338
புகலூர்மேவிய புண்ணியன்—ஜி. கலியாணம், எம்.ஏ., டிப். எகனமிக்ஸ். ... 204
பெண்வளர்த்த பாசம்—வ. பா. தாமரைக்கண்ணியம்மையார் ... 107
பொன் விழா—புலவர் முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.எல். 340
மணிவிழா ... 158
மதிப்புரைகள்—புலவர்-முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.எல்- 127, 192, 253, 372
மரம் முந்தியா? வித்து முந்தியா?—முரு. பழ. இரத்தினம் செட்டியார் ... 397
மலரின் நுண்மாண்—மா. ப. தியாகராசன் பி.ஏ. ... 378
முன்னுரை—இராவ்சாகிப்-நல். முருகேச முதலியார், பி.ஏ. ... 1
வரவேற்புரை—எஸ். துரைசாமி அய்யர் ... 12
வரவேற்பு வாழ்த்துப்பா—மதுரைச் சைவ சித்தாந்த சபை ... 117
வாழ்த்தியல் இன்னுரை—முருகவேள் ... 116
வாழ்த்துப்பா—முருகவேள் ... 287
வாழ்வாவது எது?—ந. ரா. ஆடலரசு ... 143
வீடுபேற்றில் மலம் உண்டா?—முரு. பழ. இரத்தினம் செட்டியார் ... 228
53-வது ஆண்டு அறிக்கை—மா. ப. தியாகராஜன், பி.ஏ. ... 64
1959-ம் ஆண்டின் சமாஜப் பணியாளர்கள் ... 125

---

சாது அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை-4

Registered No. M. 2330 'SIDDHANTHAM'
Vol. 32—No. 1

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விளம்பி தை 1959 ஜனவரி | இதழ் 1

உள்ளுறை பக்கம்


| உள்ளுறை | பக்கம் |
| --- | --- |
| முன்னுரை ... | 1 |
| வரவேற்புரை ... | 12 |
| சைவ மங்கையர் மாநாட்டுத் தலைமையுரை ... | 17 |
| சைவ இளைஞர் மாநாட்டுத் தலைமையுரை ... | 26 |
| சமாஜ விழாவும் வேண்டுகோளும் ... | 35 |
| " உண்மை விளக்கம் " ... | 37 |





பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.
உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## புதிய வாழ்நாள் உறுப்பினர்கள்

மயிலத்தின்கண் நிகழ்ந்த சமாஜ விழாவில் காட்டரண் பாக்கம் - திரு. வரதா ரெட்டியார் அவர்களும், அவர்தம் வாழ்க்கைத் துணைவியார் திருமதி. ஜெயலட்சுமி அம்மையார் அவர்களும் ரூபாய் நூறு செலுத்தி நமது சமாஜத்தின் வாழ்நாள் உறுப்பினர்களாகச் சேர்ந்திருக்கும் செய்தியினை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். திருமதி. ஜெயலட்சுமி அம்மையார் அவர்கள், சென்னைச் சிவனடியார் திருக்கூட்டம், மாம்பாக்கம் குருகுலம், வடலூர் விசாலாட்சி அம்மையார் தவச்சாலை, காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகம், மயிலம் ஆதீனம் போன்ற பலதிற அமைப்புகளுடன் தொடர்புகொண்டு சீரிய அறங்கள் பல செய்து வருபவர்கள். பாண்டிச்சேரிக்கு அருகிலுள்ள திருவாசிலி என்னும் தேவாரப் பாடல்பெற்ற திருக்கோயிலின் அறங்காவலராக விளங்கிப் பணி பல புரிந்து, அப்பதிகத்தை அங்கே சலவைக்கல்லில் பொறித்து வைத்துப் பூசித்து வருபவர்கள். திருமுறைகளின்பாற் பெரிதும் பற்றும் பயிற்சியும் மிக்கவர்கள். சைவ மங்கையர் மாநாட்டில் "சிவபாத்துவம்" என்னும் பொருள்பற்றி அம்மையார் அவர்கள் ஆற்றிய சிறந்த சொற்பொழிவே, அவர்தம் ஞானநூற் பயிற்சியினை நன்கினிது விளக்கும். திலகவதியார்பாற் பெரும்பத்திமை வாய்ந்த அம்மையார் அவர்கள், அண்மையில் திருவதிகையில் "இலட்ச தீபம்" ஏற்றி வழிபட்டு மகிழ்ந்தார்கள். "வழிபாட்டு அரசி" எனப் பெரியோர்களாற் சிறப்பிக்கப் பெற்றார்கள். இத்தகைய சிவநேயம் மிக்க அம்மையார் அவர்களும் அவர்தம் அருமைக் கண்வரும் நம் சமாஜத்தின் வாழ்நாள் உறுப்பினர்களாகச் சேர்ந்தமை குறித்துப் பெரிதும் மகிழ்கின்றோம். இவர்களைப் பின்பற்றி ஏனைய சைவச் செல்வர்களும் செல்வியர்களும் சமாஜத்தின் வாழ்நாள் உறுப்பினர்களாக்ச் சேர்ந்து உதவும்படி வேண்டுகின்றோம். —முருகவேள்.

---

## செய்திச் சுருக்கங்கள்

**சிவபூசை மகாநாடு:** சென்னைத் திருமயிலைக் கபாலீச்சரத்தில் விளம்பி ஆண்டு கார்த்திகைத் திங்கள் 29, 30-ம் நாட்களில் நடைபெற்றது. சிவஸ்ரீ ஈசான சிவாசாரியர், சிவபூசைத் துரந்தார் மெய்யப்ப செட்டியார் அவர்கள் ஆகியவர்கள்

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு


| மலர் 32 | விளம்பி தை 1959 ஜனவரி | இதழ் 1 |
| --- | --- | --- |


## சைவ சித்தாந்த மகா சமாஜம்
## 53-வது ஆண்டு நிறைவு விழா
### மயிலம் - திண்டிவனம் வட்டம் [27-12-58]

சமாஜத் தலைவர்
இராவ்சாயிப் - நல். முருகேச முதலியார், பி.ஏ., அவர்கள்
நிகழ்த்திய

## முன்னுரை

மெய்யன்பர்களே !

முருகக் கடவுளைத் தாங்கிநிற்கும் பெற்றியுடையது மயிலம் என்ற இத்திருத் தலம். மயில்போன்று காட்சியளிக்கும் தன்மையால் இக்குன்றம் மயிலம் என்ற பெயர் பெற்றதுபோலும். இங்கு வீற்றிருக்கும் குமாரக் கடவுள் வள்ளி தெய்வயானை சமேதராய் நின்ற திருக்கோலத்துடன் காட்சியளிக்கின்றார். சுமார் எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் இவரை வழிபட்டு வாழ்ந்து வந்த ஸ்ரீமத் சதாசிவபாலைய சுவாமிகள் என்னும் சித்த புருடரின் வேண்டுகோட் கிணங்க அடியவர்களுக்கு அருள்பாலிக்க வீற்றிருக்கும் முருகக் கடவுளின் முன்னிலையில் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 53-ஆம் ஆண்டு விழாவும் சைவர் மாநாடும் இனிது நடைபெற இருப்பது சாலவும் பொருத்தமே. முருகன் நூல் அறிபுலவன் என்றும், ஆகம பண்டிதன் என்றும் ஆரணன் என்றும்

பூரணன் என்றும் அருள் நூல்கள் துதிக்கின்றன. அவனருளின்றிச் சமயத்தொண்டுகளும் சமய வாழ்வும் வெற்றி பெறு. எனவே, வெற்றிவேல் பெருமான் இம்மாநாட்டுக்கு உற்ற துணையாக அருள்புரிய வேண்டுமென்று அஞ்சலி செய்வோமாக !

2. இத்தகைய மாநாடு 1940-ம் ஆண்டில் முன்பு ஒரு முறை இத்தலத்தில் நடத்தப் பெற்றது. இரண்டாவது முறையாக இங்கு இம்மாநாட்டை நடத்தித்தர அருள்பாலித்து இப்போது நம்மிடையே அமர்ந்துள்ள 18-ஆம் பட்டம் வகிக்கும் குரு மகாசந்நிதானம் ஸ்ரீமத் சிவஞானபாலைய தேசிக சுவாமிகளுக்கு நமது பணிவார்ந்த வணக்கத்தையும் நன்றியையும் செலுத்தக் கடமைப் பட்டுள்ளோம். நமது சைவ சமயப் பரமாசாரியராகிய திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் நாளும் இன்னிசையால் தமிழ் வளர்த்தமைபோல, நமது சுவாமிகளும் தமிழ் வளர்ச்சி கருதி இங்கே ஒரு தமிழ்க் கல்லூரியை அமைத்து நடத்தி வருகின்றார்கள். அவர்கள் நமது சமாஜத்திற்கு உறுதுணையாக இருப்பது நமக்கு ஊக்கத்தையும் மகிழ்ச்சியையும் தருகின்றது. இவ்வாதீனத்தைச் சேர்ந்த திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் மடத்தின் சார்பில் ஒரு கழகம் அமைத்துப் பிரதி கிருத்திகை தோறும் நமது சமாஜ உறுப்பினர்கள் சொற்பொழிவாற்றிவரல் வேண்டும் என்று அன்புகூர்ந்து கட்டளையிட்டனர். அதன்படி "முருகன் செந்தமிழ்க் கழகம்" என்ற பெயரால் ஒரு கழகம் சென்ற அக்டோபர் மாதம் திருப்போரூரில்நிறுவப் பெற்றுக் கிருத்திகை தோறும் நம்மவர்களால் சொற்பொழிவுகள் நடத்தப்பெற்று வருகின்றன. இம்மாதிரி ஆக்க வேலைகளில் சமாஜத்தை மேலும் மேலும் ஈடுபடுத்தச் சுவாமிகள் உறுதுணையாக இருக்கவேண்டுமென்று ஆசைப்படுகின்றோம்.

3. இம்மாநாடு பலவிதங்களில் சாலச் சிறப்புடையது. இதைத் துவக்கி வைப்பவர் சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி உயர்திரு. சுப்பிரமணிய நாடார், B.A.,B.L. அவர்கள். அவர்கள் நமது சமாஜ உறுப்பினர்களுள் ஒருவர். மிகுந்த சமயப்

பற்றும், பரந்த படிப்பும், நுண்ணறிவும் ஆர்வமும் உடையவர்கள். அவர்கள் நம் வேண்டுகோட்கு இசைந்து இங்கு வந்து இம் மாநாட்டைத் துவக்கி வைப்பது மிகவும் பொருத்தமும் சிறப்புமாகும். இம்மாநாட்டுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சித்தாந்த சிகாமணி-உயர் திரு க.வச்சிரவேல்முதலியார், B.A.,L.T. அவர்களைச் சைவ உலகம் நன்கறியும். சித்தாந்த சாத்திரங்களை முறையே கற்றறிந்தவர்களுள் அவர்கள் தலைசிறந்தவர் என்று சொல்வது மிகையாகாது. ஆங்கில வடமொழி ஞானமும், பரந்த படிப்பும், தெளிவாகப் பேசும் ஆற்றலும் வாய்ந்து, சைவ சமய ஆராய்ச்சியில் திலகமாகத் திகழ்கின்றார்கள். அவர்கள் இம் மாநாட்டிற்குத் தலைவராய் வாய்த்தது சைவத்தின் வளர்ச்சிக்கு ஒரு நல்ல அறிகுறியாகும். திரு. ஜே. எம். நல்லசாமி பிள்ளை, அருட்டிரு மறைமலையடிகளார், அருட்டிரு ஞானியார் சுவாமிகள்போன்ற பெரியார்களுக்குப்பின் சித்தாந்த சைவத்தின் தத்துவத்தை முறைப்பட விளக்கவல்லவர் இவர் என்னலாம். அவரைச் சைவ உலகம் போற்றிப் பாராட்டி நன்கு பயன் படுத்திக் கொள்ள விரைந்து வழி தேடவேண்டும்

4. இளைஞர் மாநாட்டிற்குத் தலைமை வகிப்பவர் வித்துவான் திரு. அடிகளாசிரியர் அவர்கள். கரந்தைப் புலவர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளராகப் பணிசெய்பவர்கள். மயிலம் தமிழ்க் கல்லூரியிலும் இருந்து தொண்டாற்றியவர்கள். மங்கையர் மாநாட்டுக்குத்தலைமைதாங்குபவர்கள் திருமதி. வித்துவான் - ந. மங்கையர்க்கரசி அம்மையார் அவர்கள். அவர்தம் தந்தையார் கோவை-வித்துவான் - கவியரசு - திரு. கு. நடேசக்கவுண்டர் அவர்கள் ஆவர். தமது தந்தையாரைப் போலவே சிவநெறியிற் பெரிதும் ஈடுபாடு மிக்கவராய், மயிலம் தமிழ்க் கல்லூரியிற் பயின்று, இதுபோது தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்து வருபவர்கள். இம் மாநாட்டிற் கொடியேற்று விழவை நிகழ்த்தியவர், சிறிதுகாலம் நமது சமாஜத்தின் செயலாளராக இருந்து, இதுபோழ்து இராமநாதபுரம் மாவட்டத்திற்குக் கலெக்டராக இருக்கும் திரு. G. M. முத்துசாமிப் பிள்ளை. I.A.S. அவர்கள். வித்துவான் பரீட்சை

யில் தேறியவர்கள். சைவப்பற்று மிக்கவர்கள். அடக்கமே உருவெடுத்தவர்கள். அவர்கள் ஏற்றிய கொடி உயர்ந்து நிற்றல்போலச் சைவமும் ஓங்கி உலகெலாம் பரவி விளங்க வேண்டும் என்பதே சமாஜத்தின் அடிப்படையான நோக்கமாகும்.

5. இந்த மாநாட்டுக்கு இன்னும் ஒரு சிறப்பு உண்டு. பெரியபுராணத்தின் ஒப்பற்ற விரிவுரையாசிரியரும், சைவ சமய ஒழுக்க நெறியில் தலைசிறந்தவரும், அம்பலவாணர் திருப்பாதத்தில் அயரா அன்புபூண்டு ஒழுகுபவருமான ஸ்ரீலஸ்ரீ சம்பந்தசரணாலயத் தம்பிரான் சுவாமிகள் விஜயம் செய்து மாநாட்டில் கலந்துகொள்வதாகும். அவர்கள் முதிர்ந்த வயதில் சமாஜத்தின்பால் வைத்த கருணையால் வர இசைந்தது நம் நல்வினையே. அவர்கள் நல்லுபதேசம் நமக்கு உறுதுணையாக நிற்கும். அவருக்கு நாம் செய்யும் கைம்மாறு 'பெரியோய் போற்றி' என்று அஞ்சலி செய்வதன்றி வேறில்லை.

6 சொற்பொழிவாற்ற ஏற்றுக்கொண்டிருக்கும் அன்பர்களும் சீலத்திலும் கல்வியிலும் சிறப்புற்றவர்கள். அவர்களுடைய அறிவுரைகளும் நல்ல பயன்தரும்.

7. இத்தகைய பெரியார்கள் ஒன்றுகூடி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் ஆதரவிலும் ஆசியிலும் நடக்கும் இம் மாநாடு சைவ மக்களுக்கும் சமாஜத்துக்கும் புத்துயிர் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை. எனினும் இம் மாநாட்டில் ஒரு பெருங் குறைபாடு உள்ளது. சென்ற 32 ஆண்டுகளாகச் செயலாளராகவும் தலைவராகவும் இருந்து, சமய நூற் பதிப்பாளராகவும் பணியாற்றிய பெரியார் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், B.A.,B.L. அவர்கள் இப்போது நம்மிடை இல்லாமை ஒரு பெருங் குறையாகும். சமாஜத்தைப் பலவித வசதிக் குறைபாடுகளுக்கு இடையில் தீரத்துடனும் திடநம்பிக்கையுடனும் வளர்த்துத் தந்த பெருமை அவர்களுக்கே உரியது. அவர் காட்டிய வழியில் பின் செல்வதே நாம் அவர்களுக்குச் செய்யும் கைம்மாறாகும்.

8. இப்போது செயலாளர் அவர்கள் படிக்க இருக்கும் ஆண்டு அறிக்கையில் இருந்து சமாஜம் செய்துவரும் பணிகளைப் பற்றி நீங்கள் விரிவாக அறிவீர்கள். எனவே அவைகளைப் பற்றி ஈண்டுக் கூறத்தேவையில்லை. சமாஜத்தின் குறைகளையும் தேவைகளையும் அறிக்கை விளக்கிச் சொல்லும். அவைகளைத் தீர்த்து வைக்கச் சைவர்கள் முன்வர வேண்டுமென்று பணிவுடன் கேட்டுக் கொள்ளுவதே அடியேன் கடமையாகும். இதைப் பற்றி மிகவும் தீவிரமாக ஆராய்ந்து முடிவுகள் செய்து நடைமுறைக்குக் கொண்டுவரப் பாடுபட வேண்டுவது நமக்குத் தலையாய கடமையாக இருக்கின்றது. சொற்பொழிவுகளுடன் மட்டும் இம் மாநாடு முடிந்தால் பயனற்றதாகும். சைவர்கள் செய்வினைத் திறனும் ஆற்றலும் இல்லாதவர்கள் என்ற பழி நம்மைத் தொடர்ந்து நிற்கும். எனவே, ஒவ்வொருவரும் ஒல்லும் வகையில் செயல்கள் செய்ய ஆயத்தமாவது மிகவும் அவசியம். மாநாடு முடிந்தவுடன் மறுமாநாடு கூடும் வரைக்கும் வாளா இருப்பின் ஒன்றையும் சாதித்தல் இயலாது. சமாஜ அலுவலர்களும் மாவட்டப் பிரதிநிதிகளும், தாங்கள் செய்ய வேண்டிய கடமைகளைச் செயற்குழுக் கூட்டத்தில் செவ்வையாக ஆராய்ந்து தீர்மானித்துக்கொண்டு, உடனடியாகச் செயலாற்றத் தொடங்குதல் வேண்டும். ஒவ்வொரு மாவட்டத்திலும் மூன்று மாதங்களுக்கு ஒரு முறையாவது பொதுக்கூட்டம் கூட்டிப் பெருவாரியாக உறுப்பினர்களையும் 'சித்தாந்தம்' இதழுக்குக் கையொப்பதாரர்களையும் சேர்க்க முயலுதல்வேண்டும். உறுப்பினர் தொகையைப் பெருக்குவதொன்றே உடனடியாகச் செய்து முடிக்கவேண்டிய வேலையாகும். மற்றும், நாம் செய்தற்குரிய பணிகள் பலவுள. அவற்றுள் சிலவற்றைக் குறிப்பிட விரும்புகின்றேன் :—

(1) அன்பே சிவம் என்ற கொள்கையுடைய சமயத்தைச் சார்ந்த நம்மவர்கள் எல்லோரிடமும் அன்பாயிருந்து சைவ ஒழுக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.

(2) சிவ சின்னங்களாகிய விபூதி, உருத்திராட்சத்தைத் தயங்காமல் அணிதல் வேண்டும்.

(3) சைவ மங்கையர்களும் ஆடவர்களும் சைவ நூல்களைப் படித்து இல்லத்தில் சைவப் பண்பாட்டை விளங்கச் செய்ய வேண்டும்.

(4) ஆலய வழிபாடு, வார வழிபாடு முதலிய நற்கருமங்களில் நின்று அவைகளின் உட்பொருள்களை அறிய வேண்டும்.

(5) ஆலயங்களை ஆகமவிதிப்படி பரிபாலனம் செய்து, ஆருத்திரா முதலிய திருவிழாக்கள் விரதங்கள் முதலியவற்றின் உட்பொருளை மக்களுக்குத் தெரிவிக்கவேண்டும். சமயாசாரியர்கள் சந்தான குரவர்கள் நாயன்மார்கள் முதலியோர்களுடைய திருநக்ஷத்திரங்களைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டும்.

(6) சைவத்திருமுறைகளையும் சித்தாந்த சாத்திரங்களையும் ஓதலும் ஓதுவித்தலும் கடமையாகக்கொள்ள வேண்டும்.

(7) சைவ தீக்ஷைகள் முறையே பெற்றுக்கொண்டு அனுஷ்டான முறையில் நிற்கவேண்டும். அதற்காகச் சைவ மடங்களும் மற்ற குருமார்களும் தக்க ஏற்பாடுகள் செய்தல் வேண்டும்.

(8) சைவர்கள் ஒருவருக்கொருவர் வீண்குறை கூறுமல் சைவப் பெரியோர்களையும் சைவ மடங்களையும் போற்றுதல் வேண்டும்.

(9) சைவப் பண்பாடு நடைமுறையில் புலனுகி, சைவன் என்ற ஒவ்வொருவனையும் இவன் சைவன் என்று உலகம் போற்ற ஒழுக வேண்டும்.

(10) நம் சமாஜமும், தற்போது சைவ மடங்களும், செய்துவரும் அரிய தொண்டாகிய சைவ நூல் அடக்கவிலை வெளியீடு இன்னும் பெருகி எல்லோரும் திருமுறைகளையும் சித்தாந்த சாத்திரங்களையும் சைவ புராணங்களையும் படிக்க வேண்டும்.

(11) இந்நாட்டிலும், இலங்கை மலாய் முதலிய நாடுகளிலுமுள்ள சைவ சபைகள், ஸ்தாபனங்கள், இவைக

ளுடைய பட்டியலைத் தயாரிக்க வேண்டும். யாவரும் ஒருமைப் பட்டுத் தொடர்புகொண்டு சைவப்பணிகளைப் பெருகச் செய் தல் வேண்டும்.

(12) சித்தாந்த நூல்களை முறையே கற்பிக்கும் வகுப்பு கள் பல விடங்களில் நடத்தத் தக்க ஆசிரியர்கள் முன்வருதல் வேண்டும்.

(13) கலாசாலைகளில் சைவசித்தாந்தப் பேருரைகள் ஏற்படுத்தி மாணவர்கள் அந்தப் பொருளை ஆராய்ச்சிப் பாடங்களாக எடுத்துக்கொள்ளத் தூண்டுதல் வேண்டும்.

(14) சிதைந்திருக்கும் சிவாகமங்களைக் கூடியவரையில் திரட்டி அச்சிட்டு ஆதிசைவர்களுக்கும் மற்றவர்களுக்கும் கிடைக்கும்படி செய்தல் வேண்டும்.

(15) சைவசித்தாந்த நூல்கள் தமிழ், வடமொழி, ஆங்கிலம், மற்றும் எந்த மொழிகளில் இருந்தாலும் அவைகள் எல்லாவற்றிற்கும் ஒரு அகராதி 'பிப்ளியாகிரபி' தொகுத் தல் வேண்டும். இது ஒரு முக்கியமான வேலையாகும்.

(16) சைவசித்தாந்தப் புத்தகசாலை (லைப்ரரி) ஒன்று பிரத்தியேகமாய் ஏற்படுத்தல் வேண்டும். பல பழைய பதிப்புகள் தற்சமயம் கிடைப்பது அரிதாக விருக்கிறது. இன்னும் கிடைக்கக்கூடிய நூல்களுட் சில விலை அதிகமா யிருந்தால், அவைகள் புத்தகசாலைகளில் கிடைக்குமாயின் பயிலுபவர்களுக்கு அனுகூலமாயிருக்கும். இத்தகைய வாசக சாலைக்கு அன்பர்கள் தங்களுடைய சேமிப்பையும் அரிய பிரதிகளையும் தக்க சமயத்தில் நன்கொடையாகக் கொடுக்க லாம். இவ்வகையான நூல்நிலையம் ஒன்று மிகவும் அவசியமானது.

(17) சமாஜத்திற்கு நிலையான ஒரு கட்டிடம் வேண் டும். இது தீராத அடிப்படையான தேவை. இது நிறைவேறு மாயின் பல காரியங்களுக்கு அனுகூலமாயிருக்கும். இந்த விஷயத்தில் இனிமேலாவது தீவிர முயற்சிகள் தேவை.

(18) சைவசித்தாந்த - தத்துவ ஆராய்ச்சியுடன் சைவ சாத்திர ஆராய்ச்சியும், இலக்கியம், புதைபொருள், கல்

வெட்டு, சிற்பம், கலை, இசை, பண் முதலிய ஆராய்ச்சிகளும் இன்றியமையாதன. சைவ சம்பந்தமான எல்லா விஷயங்களையும் முறைப்படக் காண்பிக்கும் கால நிர்ணய அட்டவணை (கிரனலாஜிகல் டேபில்) மிகவும் தேவை.

(19) சைவ சித்தாந்த பரிபாஷைகளுக்கு ஒரு பூர்த்தியான அகராதி தொகுத்து, சித்தாந்த சாத்திரங்களைப் பயிலத் தொடங்குபவர்களுக்கு உபகரிக்கவேண்டும்.

(20) சித்தாந்தப் பயிற்சி மட்டும் அல்லாமல் மற்ற அபிமதங்களையும் உடன் படித்துத் தாரதம்மியங்களைச் செவ்வையாக அறியவேண்டும். திராவிட மா பாடியத்தில் நமது மாதவச் சிவஞான சுவாமிகள் சாற்றியபடி, " அந்தம் வேதாந்தம் அந்ததரம் சித்தாந்தம் " என்னும் உண்மையை அதனால் நன்றாக உணரலாம்.

(21) திராவிட மாபாடியத்தைத் தக்கவர்களைக்கொண்டு ஆங்கிலத்திலும் ஜர்மன், பிரஞ்சு முதலிய பாஷைகளிலும் மொழிபெயர்த்து பிறநாட்டார்க்கு அறிவித்தல்வேண்டும். மெய்கண்டாரைப்பற்றி மேல்நாடு நன்கறிய வேண்டும்.

(22) சைவ சித்தாந்தத்துக் கென்றே ஒரு ஆராய்ச்சிக் கழகம் நிறுவுதல் மிக அவசியம். அத்தகைய கழகத்தின் மூலமாக ஆராய்ச்சியை வளர்த்தல், ஆராய்ச்சி நூல்களை வெளியிடுதல், ஆராய்ச்சி வித்வத் சபை கூட்டுவித்தல் முதலியவைகள் செய்யலாம். சைவ சித்தாந்தத்தைப் பற்றிய தவறான அபிப்பிராயங்களைக் கண்டால் வாதமில்லாமல்—போரிடாமல்—தண்மையான முறையில் திருத்துதல் வேண்டும்.

(23) சைவசித்தாந்தப் பேருரையாளர்களைத் தென்னாடு, வடநாடு மட்டுமின்றி, இலங்கை, மலாய், தாய்லாந்து முதலிய நாடுகளுக்கும் அனுப்பி, சித்தாந்தத்தை விளக்கம் செய்தால் நன்மைபெருகும்.

(24) இங்கிலாந்து அமெரிக்கா ஐரோப்பா முதலிய மேல்நாடுகளுக்கு இம்மாநாட்டுத் தலைவரைப் போன்ற விரிவுரையாளர்களை அனுப்பிச் சித்தாந்தத்தை நன்றாக அறி

முகப்படுத்தல் வேண்டும். மேனாடு சித்தாந்தத்தைப் பரிவுடன் ஏற்றுக்கொள்ளும் என்பதில் ஐயமில்லை. "பிராக்மாடிஸம்" "ஹியூமானிஸம்" போன்ற தத்துவங்களும், ஸ்வீடன்பர்க்கின் உயரிய தத்துவமும் சித்தாந்தத்தின் அடிப்படைக் கருத்துக்களும் உறவு கொண்டவையே. வேதாந்தத்தை 'பௌன்னியல் தத்துவம்' என்று கருதும் மேனாடு அதன் தெளிவான சித்தாந்தத்தை, 'பூரண தத்துவம்' 'இன்டக்ரல் தத்துவம்' என்று வரவேற்கும் என்பதில் ஐயமில்லை. சித்தாந்தத்தைப்பற்றி டாக்டர் ஜி. யு. போப், கௌடி முதலிய மேனாட்டுப் பேரறிவாளர்கள் நுட்பமாகச் சொல்லிப்போனபின், விரிவாக அறிமுகப்படுத்தச் சைவ உலகம் முன்வாராதது ஒரு பெருங்குறையே.

(25) அறியாமையினால் மேனாடுகளில் — இங்நாட்டிலுங் கூட — வெளிவரும் தத்துவ ஆராய்ச்சி நூல்களில் சைவ சித்தாந்தத்தைப்பற்றி விரிவாகவோ சரியாகவோ கூறப்படுவதில்லை. தற்போது நமது சைவமடங்கள் வட இந்தியாவில் சைவசித்தாந்தப் பேருரைகள் ஏற்படுத்துவதும், சைவசித்தாந்த நூல்களை ஆங்கிலத்திலும் பிற பாஷைகளிலும் மொழிபெயர்த்து வெளியிடுவதும் மிகவும் போற்றத்தக்கவை.

(26) மேனாட்டில் இரண்டொரு இடங்களில் சித்தாந்தத் தத்துவ ஸ்தாபனங்கள் (சித்தாந்த சென்டர்கள்) ஏற்படுத்தினால் நல்ல பயன்தரும்.

(27) சித்தாந்தத்தை விளக்க ஆங்கிலத்தில் ஒரு மாதப் பத்திரிகை மிகத்தேவை. இது தமிழ் நன்கு பயிலாத நம்மவர்களுக்கும் வெளிநாட்டாருக்கும் பயன்படும். பொருள் வசதியிருப்பின் இதைச் சமாஜமே செய்தல்கூடும். மற்ற பத்திரிகைகளின் கூட்டுறவும் வேண்டும்.

(28) சித்தாந்தத் திருக்கூட்டம், அதாவது 'சித்தாந்த மிஷன்' ஒன்று ஏற்படுத்தி அதில் உடல் பொருள் ஆவி என்ற மூன்றையும் அர்ப்பணம் செய்யக்கூடிய ஒழுக்கமும் அறிவும் கூடிய சிலரைச் சேர்த்து, சித்தாந்தச் செந்நெறியை விளக்கிக் காட்டவேண்டும்.

(29) ஒவ்வொரு குடும்பத்திலும் ஒருவரையாவது சமயத்தொண்டில் பணியாற்றப் பழக்கிவைக்கவேண்டும். வரும் வருவாயில் நூற்றில் ஒரு பங்காவது சமயத் தொண்டுக்குப் பயன்படுத்த வேண்டும்.

(30) அன்பே எங்கும் பெருகவேண்டும். அறிவும் ஒழுக்கமுமே திகழவேண்டும். அன்பையும் ஒழுக்கத்தையும் சமரசத்தையும் அடிப்படையாகவுள்ள இந்தச்சமயம் உலகத்தில் அமைதியையும் சகோதரத்துவத்தையும் வளர்க்கும். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்பதைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே போதித்த இந்நெறி இன்றைக்கும் உலகுக்கு நன்மை பயத்தல் வேண்டும். முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம்பொருளாய், பின்னைப் புதுமைக்கும் பெயர்த்துமப் பெற்றியனுன முதல்வன் அருள் சூழ வேண்டும்.

9. மேல்கூறிய ஒவ்வொரு விஷயத்தையும் நடவடிக்கைக்குக்கொண்டுவரக்கூடியவரையில் தக்க ஏற்பாடுகள்செய்ய இம்மாநாட்டில் செயல்கூட்டம் தீவிரமாய்ச் சிந்திக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். மேற்கொண்டு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள ஒவ்வொரு மாவட்டத்திலும் திட்டங்கள் அமைந்துக்கொள்ளவேண்டும். "சித்தாந்த"ப் பத்திரிகையை இம்மாதிரி கருத்துப் போக்குவரத்துக்கு நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டும். எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளின் சுருக்கமான அறிக்கையை "சித்தாந்தத்"தில் மூன்றுமாதத்திற்கு ஒருமுறை வெளியிடுதல் கூடும். பிரசாரமின்றி ஊக்கமும் செயல் உணர்ச்சியும் எழுச்சி பெறாது.

10. இவ்வாண்டு அடியேனுடைய கருத்திற்கிணங்க ஒரு ஆராய்ச்சிக் கூட்டமும் இம்மாநாட்டில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்தக் கருத்துக்கு மாநாட்டுத் தலைவரவர்களும் மற்றும் பல பெரியோர்களும் ஆதரவு தந்ததற்குப் பாராட்டுகிறேன். இந்த ஆய்வுக்கூட்டத்திலும் அன்பர்கள் தக்கமுறையில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டுமாய்க்கோரு

கிறேன். நல்ல கட்டுரைகள் சமர்ப்பிக்கப்பட்டால் அவை பின் " சித்தாந்தத்தில் " அச்சிட ஏற்பாடு செய்தல் கூடும்.

11. இத்தகைய சீரிய வேலைகளைச் சிந்தித்து ஆவனசெய்வதற்கு யோசனைகள் சொல்லி உதவிசெய்ய நமக்குத் தலைவராகச் சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேலு முதலியார் வாய்த்தது நமது பெரும்பாக்கியமே. இன்னும் குழுமியுள்ள செல்வாக்கும், அதிகாரமும் ஆற்றலும் படைத்த பெரியோர்களும் இதற்குத் தக்க உதவி செய்வார்களென்று எதிர்பார்க்கிறேன்.

12. மாநாட்டுத்தலைவர்களையும், சொற்பொழிவாளர்களையும், உறுப்பினர்களையும், மற்றும் இங்கு வந்துள்ள அன்பர்கள் யாவரையும் சமாஜத்தின் சார்பிலும் என் சார்பிலும் மனமாரவரவேற்கிறேன். இம்மாநாடு இனிது நிறைவேற இங்கு எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான் இன்னருள் புரிவாராக!

நமச்சிவாய வாழ்க! சித்தாந்த சைவம் விளங்குக!

---

உ

முருகன் துணை

## சைவ சித்தாந்த மகா சமாஜம்

# 53-வது ஆண்டு நிறைவு விழா, மயிலம்

27-12-58 சனிக்கிழமை காலை மாநாட்டில் வரவேற்புச் செயலாளர்
திரு. S. துரைசாமி அய்யர் அவர்கள் ஆற்றிய

# வ ர வே ற் பு ரை

நீர் சூழ்ந்த இந்நில உலகத்தின்கண் தோன்றிய மக்கள் நாளடைவில் தங்களது அறிவினாலும் முயற்சியினாலும் தங்களுக்கு ஏற்ற வகையில் வாழப் பழகிக் கொண்டார்கள்; ஆயினும் முயற்சிக்கும் அறிவிற்கும் முடியாதனவாகிப் பல செயல்கள் வீணாவதைக் கண்டு அதன் காரணத்தை ஆராய்ந்து பார்த்தார்கள். காரணம் அறியாது தங்களுக்குத் தெரியாத ஒரு பொருள் இருந்து அச்செயலைச் செய்கின்றதென்று கண்டு, அச் செயலைச் செய்கின்றவன் ஒருவன் உளனாக வேண்டும் என்றும், அவன் எல்லாவற்றையும் கடந்து நிற்கின்ற காரணம் பற்றிக் கடவுள் என்று கூறப்படுவான் என்றும், கருதலளவையால் கண்டு உறுதிப்படுத்திக் கொண்டனர். அக்காலத்தும் காட்சியளவையே கருதுகின்ற மக்கள் கடவுள் இல்லை என்ற கொள்கையினையும் கொண்டவராயிருந்தனர். கடவுள் உண்டென்ற கொள்கையினருங்கூட கடவுளை நேரே காணமாட்டாமையால் தம் தம் அறிவுக்குத் தக்கபடி கடவுளது பொதுத்தன்மை சிறப்புத் தன்மைகளில் ஒரு சிலவற்றை உடன்பட்டு அத்தன்மை உடையாரையே கடவுளாகக் கருதினர். அதனால் கடவுளை வழிபடுகின்ற கொள்கையினருங்கூடப் பலதிறத்தினரானார்கள். எனவே கடவுட்

கொள்கை உள்ள சமயத்தார் பலதிறப்படக், கடவுள் கொள்கை யுடைய சமயங்களும் பலவாயின. அவ்வச் சமயத் தார்களும் தங்கள் தங்கள் சமயத்திற்கேற்ற நூல்களையும் வகுத்துக்கொண்டார்கள். இச் சமயங்களுள் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னமே தமிழ்நாட்டில் சிறந்தோங்கி யிருந்த சமயம் சைவ சமயம் என்பது ஆராய்ச்சியாளர் துணிபாகும்.

சைவ வழிபாட்டிற்குரிய தெய்வமாகக் கருதப்படுவது சிவம் என்னும் செம்பொருளாகும். சிவத்தைப்பற்றித் தொல்காப்பியர் கூறியிலரேனும், கடவுள் என்ற பெயரால் அவரால் சுட்டப்படுவது சிவத்தையேதான் குறிக்கும். சிவம் என்ற சொல் செந்தமிழ்ச் சொல்லே என்றும், சிவத்தை வழி படுகிற சைவ சமயமே தமிழர் சமயம் என்றும், அருட்டிரு. மறைமலையடிகள் போன்ற அறிஞர் பெருமக்கள் ஆராய்ந்து கண்டிருக்கின்றனர்.

நமது முன்னோர்கள் கடவுளை உருவம் உடையவனாகவும், இல்லாதவனாகவும், இரண்டும் உடையவனாகவும் கண்டறிந் தார்கள். ஆதலின் அதற்கேற்ப அவர்கள் வகுத்துக்கொண்ட சிவனது வடிவம் இலிங்கமாகும். " கானாத அறிவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நீனாக மணிந்தார்க்கு நிகழ்குறி யாம் சிவலிங்கம் " எனச் சேக்கிழார் கூறுதலும் நினைவு கூரற்பாலது.

எனவே சைவ சமயம் மிகவும் தொன்மைவாய்ந்தது. செந்தமிழ் நாடேயன்றி மற்ற பிற நாடுகளிலும் பரந்து அது விளங்கியிருந்தது. ஆப்பிரிக்கா, அமெரிக்கா முதலிய கண் டங்களிலும் சிந்துநதிப் பள்ளத்தாக்கிலும் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னமே இலிங்கங்கள் இருந்திருக்கின்றன என ஆராய்ச்சியாளர் கூறும் கூற்றை ஏற்றுக்கொள்வோ மானால், அங்கெல்லாம் சைவசமயம் ஒரு காலத்தில் செழித் திருந்த தென்பதை அறியலாம். இனிச் சைவசமயம் மற் றெல்லாச் சமயங்களினும் சிறந்தது என்பதற்கான காரணங் கள் சிலவற்றை ஆராய்வோம்.

பிற சமயங்கள் கூறுகின்ற எல்லாக் கொள்கைளும் தன் னிடத்தே கொண்டு, புறச்சமயக் கொள்கைகள் எல்லாவற்றை

யும் மறுத்து உயர்ந்து நிற்பது சைவ சமயம். சைவ சமயத்தாரால் ஆராய்ந்தறியப்பட்ட பொருள்களை அவன், அவள், அது என மூவகையாகக் கொண்டு அம்மூவகைப் பொருளும் சேர்ந்ததே உலகம் என்பர். இவ்வாறு காணப்படுகின்ற உலகம், ஓர் காலத்துத்தோற்றுவிக்கப்பட்டுப் பாதுகாக்கப்படவும் பின்பு அழிக்கப்படவுமாகக் காண்கின்றபடியினால் இதைச் செய்கின்ற கர்த்தா ஒருவன் உண்டென்று கருதினர்கள். கர்த்தாவானவன் இம் முத்தொழிலையும் செய்யும்போதே மாயை முதலிய மலங்களைத் துணையாகக் கொண்டு தொழிலைச் செய்கிறான். ஆதலினால் உயிர், கடவுள், வினை ஆகிய முப்பொருள் உண்டென்று வரையறை செய்தனர் நம் முன்னோர். எனவே கடவுளாகிய பதி, உயிர்களாகிய பசு, பசுக்கள் இறைவனை அறிய ஒண்ணுதபடித் தடுக்கின்ற மலமாகிய பாசம் என்று முப்பொருள் உண்மையினைப் பண்டைச்சைவர் கொண்டனர். அவைகளுள் பதியாகிய இறைவனும் பசுவாகிய ஆன்மாவும் நிற்கும் சம்பந்தத்தை அத்துவித சம்பந்தம் என்பர்.

அத்துவிதம் :—ஆன்மாவும் இறைவனும் கலந்துள்ள தன்மைக்கு அத்துவிதம் எனப் பெயர் கொண்டனர் சைவ சமயத்தினர். இச் சொல்லையே பல சமயத்தினரும் தம் கொள்கைக்கேற்பப் பொருள் பிரிப்பாராயினர். அத்துவிதம் என்ற சொல்லுக்கு "பொன்னும் பணியும் போல உயிரும் இறையும்" என அபேதம் (அபேதம் - பேதமற்றது) எனப் பொருள் கொண்டனர் ஏகான்ம வாதிகள். இருளும் ஒளியும்போலப் பேதம் (பேதம் - இரண்டு) என்று கூறினர் ஒரு சாரார். சொல்லும் பொருளும் போலப் பேதா பேதம் என்பர் (பேதா பேதம் - ஒன்றாயும் வேறாயும் இருத்தல்) பாஞ்சராத்திரிகள். சைவச் சான்றோர் இவற்றை மறுத்து வேறு கூறுவர். பொன்னும் பணியும்போல இறைவன் அபேதம் என்று கூறினால், பொன்னே பணியான பிறகும் ஒளிவிடுவதைப் போல இறைவன் ஆன்மாவான சமயத்தும் பிரமம் தோன்றுதல் வேண்டும். அவ்வாறு தோன்றாமையினால் அது பொருந்தாது. இருளும் ஒளியும்போலப் பேதம்

என்றால் ஒளியுள்ள இடத்து இருள் நில்லாதவாறு போல இறைவன் உள்ள இடத்து ஆன்மா நில்லாது. இறைவனின்றி ஆன்மா இருக்கும் எனின் ஆன்மாவும் இறைவனைப் போல் சர்வவல்லமை உடையதாக இருத்தல் வேண்டும். அவ்வாறு இல்லாமையால் அதுவும் பொருந்தாது. இனிச், சொல்லும் பொருளும் போலப் பேதா பேதம் எனின், சொல் வாக்கின் கண் நிகழ்வது ; பொருள் வேருக இருப்பது. அவ்வாறு இறைவனும் ஆன்மாவும் என்று கொள்ளுதலும் பொருந்தாது.

இனி அபேதம், பேதம், பேதா பேதம் என்பதற்கு எடுத்துக்காட்டுகள் யாவையோ எனின் கூறுதும் ; உடம்பும் உயிரும் போல அபேதமாக நிற்பது. 'ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றினும் வேற்றுமை நயத்தின் வேறே உடலுயிர்' என்றமைபோல் உடலுக்கிட்ட பெயரை அழைக்க உயிர் ஏன் என்பதிலிருந்து ஒற்றுமையும், உயிர் நீங்கின காலத்து உடம்பு வேருகக் கிடக்கும் தன்மைமைக் காணும் போது வேற்றுமையும் புலப்படுகின்றது. அதுபோல இறைவன் ஆன்மாக்களோடு ஆன்மாவாய்க் கலந்தும் வேறுபட்டும் நிற்கிறன்.

இனிப் பேதம் என்பது அகர உயிரும் ஏனைய எழுத்துக்களும் போல, இறைவன் அகரத்தைப்போல் தனித்து நின்றும் ஏனைய எழுத்துக்களில் கலந்து வேறுபட்டும் நிற்கின்ற நிலை இதுவாகும்.

இனிப் பேதா பேதம் என்பது பழமும் சுவையும் ஒன்ருகியும் கலந்தும் நிற்றலைப்போல இறைவனும் ஆன்மாக்களும் கலந்து நிற்கின்ற நிலை. அன்றி இம் மூன்றற்குமே எடுத்துக்காட்டாகச் சாணைக்கல் கூறப்படும். அது பிரிக்க முடியாத தன்மையால் ஒன்ருகியும், கற்பொடிகள் காணப் படுதலால் வேருகியும், பொடிகள் எங்கும் பரந்து கலந்து நின்ற நிலைமையினல் பேதாபேதமாகியும் இருக்கின்றமை போல, இறைவனும் ஆன்மாக்களும் இருக்கின்ருர்கள் என்பது சைவ சமயக் கொள்கை.

எனவே அத்துவிதம் என்ற சொல்லுக்குப் பிறர் கூறும் பொருளையே சைவர் கூறுவரேனும் பிறர் கூறும் எடுத்துக் காட்டுகளை மறுத்து வேறு எடுத்துக்காட்டு கொண்டு விளக்கிக் காட்டுகின்ற தன்மையானது எல்லாச் சமயங்களையும் தன்னுட் கொண்டு எல்லாவற்றிற்கும் மேம்பட்ட சமயமாக விளங்குவது சைவசமயம் என்று, சைவப் பெரியார்கள் அறுதியிட்டுரைத்தனர் என்பது விளங்குகிறது. எனவே சைவம் எல்லாச் சமயத்திலும் சிறந்ததாக இருந்தும் பேணுவார் குறைந்த காலத்துச் சைவ மடங்களும் அவற்றின் ஆதரவால் தோன்றிய சைவசித்தாந்த சமாஜமும் சைவ சமயத்தை வளர்த்து வருகின்றன.

இச் சைவ சித்தாந்த மகா சமாஜம் கடந்த 53-ஆண்டுகளாக ஆற்றிவரும் தொண்டு அறிஞர் பலராலும் பாராட்டப் படுவதொன்றாகும். இதன் முப்பத்தைந்தாம் ஆண்டுவிழா 'சைவப் பயிர்க்குத் தண் முகிலானோன்' என்ற துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் வாக்கிற்கிணங்க சைவத்தையும் தமிழையும் இருகண்களாகக் கொண்டு வளர்த்து வருகின்ற அருட்டிரு சந்நிதானத்தின் திருவருளால் ஆன்றோர் பலருடைய சொற்பெருக்கோடு நடந்தேறியது.

கருணை வடிவம் கொண்டு இங்கு எழுந்தருளியுள்ள குரு மகா சந்நிதானம், ஐம்பத்துமூன்றும் ஆண்டு விழாவையும் இங்கு நடத்த முன்வந்துள்ளமை சைவநாடு செய்த தவப் பயன் என்றால் அது மிகையாகாது. எனவே இக் கூட்டத்தைத் திறந்துவைக்கும் பேரறிவாளர், கொடியேற்றிக் குடியிருத்தும் குணக்குன்று அவர்கள், மாநாட்டைத் தலைமை தாங்கி நடத்தும் மாபெரும் சான்றோர், சொற்பெருக்காற்றி மக்கள் மன இருளகற்றும் மாண்பில் மிக்கோர் ஆகிய அனைவரையும் வருக வருக என வரவேற்கின்றோம். அன்றியும் பல இடங்களிலிருந்தும் வந்து சமாஜத்தை சிறப்பிக்கச் செய்கின்ற பேரன்பர்கள் பலரையும் வருக வருக என வரவேற்கின்றோம்.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சைவ சித்தாந்த மகா சமாஜம்

## 53-வது ஆண்டு நிறைவு விழா, மயிலம்

# சைவ மங்கையர் மாநாட்டுத் தலைமையுரை

[27—12—1958]

[திருமதி. வித்துவான் - ந. மங்கையர்க்கரசி அம்மையார்]

“ என்றும் அடியவர் உள்ளத் திருப்பன இவ்வுலகோர்
நன்று மலர்கொடு தூவித் துதிப்பன நல்லசங்கத்
தொன்றும் புலவர்தம் யாப்புக் குரியன வொண்கலியைப்
பொன்றும் கவுணியன் சைவ சிகாமணி பொன்னடியே ”

சிவநேயச் செல்வியர்களே, பெரியோர்களே !

அனைவருக்கும் எனது வணக்கம். இவ்வரும்பெரும் மாநாட்டில் என்னைத் தலைமை தாங்கும்படி பணித்த செயலாளருக்கு எனது நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

நமது சைவம் நாடு முழுவதும் பரவவும், சைவசமயக் கருத்துக்களை எல்லோரும் அறிந்து கொள்ளவும் இத்தகைய மாநாடுகள் மிகவும் அவசியமாகும். நூல்கள் பலவற்றை நன்முறையில் அச்சிட்டுச் சைவத்திற்கும், தமிழுக்கும் அரும்பணி ஆற்றும் சைவ சித்தாந்த மகா சமாஜத்தாரின் பெரும்பணி மிகப் போற்றத் தக்கது. இம்மாநாடு வேறு ஊர்களில் நடவாமல் வீரசைவ ராஜதானியாகிய மயிலத்தில் நடைபெறுவது நமக்கு ஓர் நல்ல பேறு ஆகும். இத்தகைய பெருஞ் சிவனடியார் கூட்டத்தில் ஆண்டிலும், அறிவிலும்

சிறியேனாகிய என்னைத் தலைமைதாங்கப் பணித்த பெரியோர்களின் ஆணைக்கு உட்பட்டு என் கடமையை நிறைவேற்ற முயல்வேன்.

உலகில் பலவகையான சமயங்கள் உள்ளன. சமயம் என்பது யாது? சமை+அம்=சமையம். சமை என்றால் பக்குவப்படுத்து என்பது பொருள். எனவே, ஆன்மாக்களைப் பக்குவப்படுத்தி நன்னிலைக்குக் கொண்டுவருவதே சமயங்களின் நோக்கம் ஆகும். ஆன்மாக்கள் பலவகையான பக்குவம் உடையவர்கள் ஆகையால் பலவகையான ஆசிரியர்கள் தோன்றுகின்றனர். அவர்கள் உபதேசிக்கும் சமயங்களும் பலவகையாக உள்ளன. எல்லாச் சமய விதிகளும் அவ்வச் சமயத்தார் வாழும் நாட்டின் அமைப்பு, காலம் ஆகியவற்றிற் கேற்ப அமைந்துள்ளன.

வாய்மை, அன்பு, பக்தி, புலனடக்கம் ஆகியவை எல்லாச் சமயத்தார்களும் கைக்கொள்ள வேண்டிய ஒழுக்கங்கள் ஆகும். இவற்றை மேற்கொண்டு வாழ்வோர் இவற்றிற்குரிய பயனடைவர்.

சில கொள்கைகள் எல்லாச் சமயத்தாருக்கும் ஒன்றாக இருப்பினும் சமயங்களுள் ஏற்றத்தாழ்வு உண்டு. நன்கு ஆராய்ந்து பார்த்தால் நமது சைவசமயமே சமயங்களின் அரசாகத் திகழ்வது. எல்லாச் சமயங்களின் நற்கருத்துக்களையும் தனக்கு அங்கமாக ஒத்துக்கொண்டு, அவற்றிற்கு மேலும் பல சிறந்த கொள்கைகளையுடையதாய், உயிருக்கு நன்மை பயப்பது நம் சைவம்.

மற்றச் சமயங்களையெலாம் உண்டாக்கியவர்கள் மனிதர்களே. அச்சமயங்கள் தோன்றிய காலத்தையும் வரையறுத்துக்கூற முடியும். ஆனால் நமது சைவம் முழுமுதல்வனாகிய பசுபதியாலேயே உபதேசிக்கப்பட்டது. இன்றும் அவரே தட்சிணாமூர்த்தியாய் அமைந்து உபதேசித்துவருவது. நமது சைவம் இன்ன நாளில்தான் தோன்றியதென்று கூற முடியாது. இறைவனைப்போல் காலங் கடந்ததாக விளங்குகிறது.

திருமால், பிரமன், உபமன்னியர் ஆகியோர் நமது சமய குரவர்களே எனினும், அவர்களுக்கும் ஆசிரியத்தன்மை கொடுத்து, நமக்கு முதற்குருவாக அமைந்தவர் தட்சிணா மூர்த்தியே. இதனை,

"ஸ்ரீகாந்தத் த்ருஹிணோபமன்ய ஸ்தபன ஸ்கந்தேந்த்ர நந்த்யாதய:
ப்ராசீனா குரவோப் யஸ்ய கருணா லேசத் கதாகௌரவம்
தம் சர்வாதி குரும் மனோஞ்ய வபுஷம் மந்தஸ்மிதா லங்க்ருதம்
சின்முத்ராஹ்ருத முத்ரபாணி நளினம் சித்தேசிவம் குர்மஹே"

எனும் செய்யுளால் அறியலாம்.

ஏனைச் சமயங்கள் இவ்வுலகில் போராட்டமின்றி அமைதியாக வாழ்வதற்குரிய சில வழிகளை மட்டுமே கூறும். உலோகாயதம்போன்ற மதங்கள் இருவினை, ஆன்மா, இறைவன் ஆகியவை ஒன்றும் இல்லை. மதுவால் களிப்புத்தோன்றுவதுபோல் உலகம் தோன்றி மறைகின்றது என்பர்.

கிறித்துவர் மறுபிறப்பினை நம்பார். இறந்தோர் அனைவரும் சமாதியிலேயே உலக முடிவுவரை காத்திருப்பர். உலக முடிவின்போது இறைவன் வந்து நல்லோரை மோட்சத்திற்கும், அல்லோரை நரகிற்கும் அனுப்புவர். ஒரு பிறப்பில் பாவம் செய்தோர் உய்திபெற வழியே இல்லை என்றுகூறுவர்.

இத்தகைய சமயங்களுக்கெல்லாம் தகுந்த விளக்கம் கூறுவது நமது சைவமே. இறைவன், உயிர், உயிர்களைப் பந்தித்துள்ள பாசம் ஆகியவற்றின் தன்மைகளை நன்கு விளக்குவதும், உயிர்களுக்குக் கருவி, கரணங்களைக் கொடுத்துப் படிப்படியாக முன்னேறித் தன் திருவடியில்சேர்த்து ஆளும் இறைவன் பெருங்கருணைத் திறனை விளக்குவதும் நம் சைவமே.

வேதத்தின் முடிந்த பொருளாக விளங்குவது நம் சைவம். சேய்ஞலூரின் சிறப்பைக் கூறும் சேக்கிழார் "பண்ணின் பயனும் நல்லிசையும் பாலின் பயனும் இன் சுவையும், கண்ணின் பயனும் பெருகொளியும், விண்ணின் பயனும் பொழிமழையும் வேதப்பயனும் சைவமும்போல்

மண்ணின் பயனும் அப்பதியின் வளத்தின் பெருமை வரம் புடைத்தோ " என்று கூறுகின்றார்.

செய்வினை, செய்வான், அதன்பயன், கொடுப்பான் ஆகிய நான்கும் இறைவனே என்பதை நன்கு விளக்குவது நம் சைவம். இதனை நன்கு அறிந்தே சாக்கிய நாயனாரும் தமது பௌத்த வேடத்தைப் பொருட்படுத்தாமல், " எந் நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னிய சீர்ச் சங்கரன்றாள் மறவாமை பொருள் " எனக்கொண்டு சிவவழிபாட்டை மேற்கொண்டார்.

சிவபூசையானது சரியை, கிரியை, யோகம் ஞானமாகிய நான்கையும் உடையது. அறத்தைத் தனக்கு அங்கமாக உடையது. இசை முதலிய பலகலைகளுக்கும் இடம்தருவது. பக்தியைப் பெருக்குவது.

தாயுமானாரும், " சைவசமயமே சமயம் " என்று கூறு கின்றார். இத்தகைய அரும் சைவசமயம் சார்தல் அரிது. பல பிறப்புக்களில் பெரும் புண்ணியம் செய்தோரே சைவசமயம் சாரும் பேறு பெறுவர் என்று நமது நூல்கள் கூறுகின்றன.

" புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்
புகல் மிருதி வழிஉழன்றும் புகலும் ஆச்சிரம
அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால் சைவத்
திறத்தடைவர் இதிற்சரியை கிரியா யோகம்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர் "

என்று சிவஞான சித்தியார் கூறுகின்றது.

ஏனைச் சமயத்தார் தத்தம் தெய்வங்களை வழிபடும் போது, அவ்வழிபாட்டை அந்தந்த தெய்வ வடிவில் ஏற்றுக் கொண்டு பயன் தருபவரும் சிவபிரானே. பிறப்பு, இறப்பு, துன்புறுதல், வினை செய்தல் முதலியன அத்தெய்வங்களுக்கு

உண்மையால், அவையிலாதவனாகிய இறைவனே வழிபாட்டின் பயனைத் தருகிறான் என்றும் சிவஞானசித்தியார் கூறுகின்றது.

சைவம் பண்டைக்காலத்தில் உலகெங்கும் பரவியிருந்தது என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். இச் சைவ சுராச்சியத்திற்குப் பண்டுதொட்டுச் சிறந்த ராசதானியாய் விளங்கிவந்தது நம் இந்தியத்தேசமே ஆகும். பல முனிவர்களும், சித்தர்களும், யோகியரும் தோன்றி நாடெங்கும் இச்சமயத்தைப் பரப்பிவந்தனர். பண்டைக்கால அரசர்களும் வேத ஆகமங்கள் வல்லோரை ஆதரித்துச் சிவம் பரப்பினர்.

இடைக்காலத்தே சேர, சோழ, பாண்டியர்கள் சிவ பக்திச் செல்வர்களாய் சைவசமயத்தைப் பரிபாலித்து வந்தனர். பலவிதமான ஆலயத் திருப்பணிகள் செய்தனர். இராசராச சோழன் பெருவுடையார் கோயில் எடுப்பித்துத் திருமுறை ஓத 48 ஓதுவார்களையும், பிடாரர்களையும் அமைத்தான் என்று சாசனம் கூறுகின்றது. இச்செயலும் இவன் மகன் இராசேந்திர சோழன் "கங்கைகொண்ட சோழேச்சுரம்" எடுப்பித்துச் சர்வசிவ பண்டிதரை ஆதரித்ததும் சோழ மன்னர் பணிகளுக்குச் சிறந்த சான்றாம். மூன்றாம் குலோத்துங்க சோழர் சிறந்த சிவானுபூதிமானாய்ப் பரசமய கண்டனமும், சிவசமய ஸ்தாபனமும் செய்து திருநீற்றுச்சோழபூபதி என்ற பெயரோடு வாழ்ந்தனர்.

மடாலயங்களின் தலைவராய் அமைந்தவர்கள் சைவத்தின் இருகண்கள் போன்ற தமிழ்மொழி, வடமொழி இரண்டையும் வளர்த்தனர். பலவிடங்களில் கல்லூரிகளை அமைத்துக் கல்வியையும் சமயத்தையும் வளர்த்தனர். திருமுறைப் பாடசாலைகளை அமைத்தனர்.

சைனமும் பௌத்தமும் மேலிட்டு, வைதிக வொழுக்கம் குன்றிய காலத்தில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் என்ற சைவசமய குரவர் இருவரும் சைவ சமய ஸ்தாபனம் செய்தனர். பாண்டிநாட்டில் பரசமய கோளரியாம் சம்பந்தரைக் கொண்டு மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும்

சைவம் பரப்பினர். 16, 17-ம் நூற்றாண்டுகளில் குமர குருபரர், சிவப்பிரகாச சுவாமிகள் ஆகிய பெரியோர்களால் சைவம் பரவியது.

இதற்குப்பின் பலவிதமான அரசியல் மாறுபாட்டால் நாட்டு ஆட்சிக்கும், சமயத்திற்கும் எவ்விதமான தொடர்பும் இல்லாது போயிற்று. சைவ மரபில் தோன்றினோரும் சமயம் பரப்புவதில் அக்கறை கொள்ளவில்லை. இதனைத் தக்கதொரு வாய்ப்பாகக் கருதிக் கிறித்துவப் பாதிரிமார் தம் சமயத்தைப் பரப்பினர். அரசியலாரின் உதவிகொண்டு பாடசாலை மருத்துவசாலை ஆகியவற்றை அமைத்து, ஆங்கிலக் கல்வி போதித்து ஊர் ஊராக மக்களைக் கிறித்துவர் ஆக்கினர்.

எனவே நம் காலத்தில் சைவம் சுருங்கிப் புறச்சமயம் மிகுந்துள்ளது. சைவ ஒழுக்கம் மேற்கொண்டு தம்மைச் சார்ந்தாரையும் நன்னெறியுய்க்கவல்ல பெரியோர்கள் ஒரு சிலரே ஆங்காங்கு உள்ளனர். சமயம் செல்வாக்கோடு உள்ள காலத்தில் அதனைப் பின்பற்றுவோர் பலர். புறச்சமயம் மிகுந்துள்ள காலத்திலும் பொருள், புகழ் ஆகியவற்றைப் பொருள் எனக்கொள்ளாது உண்மைநெறி பேணல் அரிதினும் அரிது.

சைனமும், பௌத்தமும் பரவியிருந்த காலத்தில் குலச்சிறையாரும் மங்கையர்க்கரசியாரும் தாம், "சைவ வாய்மை ஒழுக்கத்தில் நின்ற தன்மை பூங்கழற் செழியன் முன்பு புலப்படாவகை கொண்டுய்த்தனர்." அவர்களைப் பின்புகண்ட ஞானசம்பந்தப்பிள்ளையார், "சூழுமாகிய பரசமயத்திடைத் தொண்டுபூண்டு வாழும் நீர்மையீர்" என்று அழைத்தார். அத்தகைய சிறப்பு இக்காலத்தே உண்மைச் சைவம் பேணி நிற்போருக்கும் பொருந்தும்.

இக்காலத்தே நமது சைவம் பரவுதற்குச் செய்யவேண்டிய பல காரியங்கள் உள. சைவப் பிரபுக்களாக உள்ளோர் பாடசாலைகளை அமைத்துப் பொருளீட்டுதற்குரிய கல்வியோடு மாணவர்களுக்குச் சமயக் கல்வியினையும் புகட்டவேண்டும். சமய பாடசாலைகள் அமைத்துத் தக்க ஆசிரியர்களைக்கொண்டு

நமது சித்தாந்த சாத்திரங்களைக் கற்பித்தல் வேண்டும். திருமுறைகளைப் பயிலல் வேண்டும்.

நம்மவரிற் புறச்சமயம் புகுந்தார் அங்ஙனம் செய்யக் காரணம் அன்னாரது வறுமையே ஆகும். ஆகையால் சைவச் செல்வர்கள் தம்மைச் சார்ந்தோர்க்குப் பொருள் உதவி செய்து கற்பித்தல் வேண்டும். அறியாமையாலும், வேறு காரணங்களாலும் பரசமயம் புகுந்தோர் உண்மையுணர்ந்திருந்தினல் அவர்களைச் சைவராக்கிக் கொள்ளவேண்டும். இவ்வாறு சம்பந்தப் பெருமானல் கூன்பாண்டியன் சைவனுக்கப்பட்டதையும், சமணர் பலர் நீறுபூசிச் சிவனடியார் ஆனதையும் இங்கு நினைவுகூர்தல் வேண்டும். "திருவாளன் திருநீறு திலகவதியா ரளிப்பப் பெருவாழ்வு வந்ததெனப்" பெற்றுத் திருநாவுக்கரசரும் சைவராகி உய்ந்தனர் அன்றோ? இத்தகைய பெரும்பணியினை இஞ்ஞான்று செய்துவரும் ஆறுமுக நாவலர் அவர்கள் நமது பாராட்டிற்கும் வணக்கத்திற்கும் உரியவர்கள். வாய்ப்புடையோர் சமய, விசேட தீக்கை செய்துகொண்டு திருவருள் பெற முயலல்வேண்டும். இத்தகைய செயல்கள் பலர் மனத்தில் தோன்றும். இவ்வாறு நினைப்போர் பலர் தாம் நினைந்தவற்றைச் செயலாக்க முடியாதவராய் உள்ளனர். இவர்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து அவர்தம் எண்ணங்களைச் செயலாக்குவதே இம்மாநாடு கொண்டாடுவதன் நோக்கம்.

இச்செயல்கள் நன்கு நிறைவேறச் சைவ மாதர் உறுதுணையாய் நிற்றல் வேண்டும். ஏனைச் சமயங்கள் ஒருசிறிதே மகளிர்க்கு உரிமை தருவன. நம் சைவம் ஆண், பெண் வேறுபாடற்ற நிலையுடையது.

சைனர் மகளிராய்ப் பிறந்தார்க்கு முத்தியில்லை என்பர். ஆனல் நம் சிவபெருமானே மாதொரு பாகனுய் விளங்குகின்றார். அடியார்களுக்கு அருள்செய வருகின்ற காலத்தும் அம்மையை இடப்பாகத்துக் கொண்டே வருகின்றார். இருநாழி நெற்கொண்டு எண்ணான்கு அறமும் வளர்த்தவள் நமது அம்பிகை. இறைவன் பெற்ற எல்லாப் பெருமைகளுக்கும் காரணம் அம்மையே என நூல்கள் கூறுகின்றன.

" சிவமெனும் பொருளும் ஆதிசத்தியொடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம்
அவள் பிரிந்திடின் இயங்குதற்கும் அரிது
அரிதெனு மறை இசைக்கு மால் "

என்பது சௌந்தர்யலஹரி. எனவே அவளது உருவாம் மகளிர் அறம் வளர்க்க உரியவர்கள், சமயம் வளர்க்கவேண்டியவர்கள். "எண்ணிலாகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும் உண்மையாவது பூசனை" என அறிந்து இறைவனை எத்துதற்கு உரியவர்கள். அத்தகைய மகளிராகிய நாம் சமயத்திற்குச் செய்யவேண்டிய கடமை யாது ?

இயன்ற அளவு நம் தாய்மொழியாம் தமிழை நன்கு கற்றல்வேண்டும். கல்வி அறிவு, சமய ஒழுக்கம் இரண்டும் சேர்ந்தால் தான் நமக்கு முழுப்பயன் கிடைக்கும். நம்மால் பிறர்க்கும் பயன் உண்டு. சைவ மகளிர் திருமுறைகளைப் பண்ணோடு பாடக் கற்றல்வேண்டும். நமது சமய நூல்களாகிய சித்தியார் முதலிய நூல்களைத் தக்கார் மூலம் கற்றல் வேண்டும்.

இவை தவிரக், காலை மாலைகளில் யாதோனுமோர் சிறந்த திருவருள் நூலை நாடோறும் பாராயணம் செய்தல் வேண்டும். வீட்டிலுள்ள குழந்தைகளுக்கு இதனைத் தவறாது பழக்குதல் வேண்டும். ஆற்றலும், வசதியும் உள்ள மகளிர் தம் வீட்டிலோ, ஏனையிடங்களிலோ தக்காரைக்கொண்டு சமயச் சொற்பொழிவுகள் நடத்துதல் வேண்டும். தாமே கற்றலைக் காட்டிலும் கேட்டுத் தெளிதல் மிகச் சிறந்ததும் எளிதும் ஆகும்.

வீட்டில் உள்ள மகளிர் அக்கறை காட்டாவிடின் வீட்டுத் தலைவன் எக்காரியத்தையும் செம்மையாகச் செய்தல் முடியாது. மகளிர் நன்னெறியில் நின்றால் வெளியுலகச் சார்பால் சற்றே மாறிய ஆடவரும் திருந்துவர்.

" நம்பர் அருளாமையால் " பரசமயம் புக்க நாவுக்கரசரைத் தம் அன்பாலும், இறைவர் அருளாலும் திருத்தியவர் திலகவதியாரே அன்றோ !

பெரியபுராணத்தில் கூறப்படும் நாயன்மார்கள் பெற்ற பேறு அனைத்திற்கும் அவர்களது வாழ்க்கைத் துணைவியரே காரணம் ஆவர். சிறந்த சோழமன்னனாக இராசராசன் விளங்கியதற்கும் அவனது தமக்கையார் குந்தவைப் பிராட்டியாரே காரணம். செம்பியன்மாதேவியார் என்னும் பெருமாட்டி எழுப்பிய கோயில்கள் மகளிரது சமயப்பணிக்கு உறுசான்றாக விளங்குகின்றது.

வீடுதோறும் சைவம் செழிக்குமானால் விரைவில் நாடெங்கும் சைவமணம் பரவும். ஆதலின் சைவமரபில் தோன்றிய நாம் அனைவரும் கல்வி பயின்று சைவ நெறி நின்று சைவப்பயிர் தழைய நம்மால் இயன்ற செயல் புரிவோமாக. இச்சைவ மாதர் கூட்டம் நாடொறும் வளர்ந்து நற்பயன் தருவதாக. வேண்டுவார் வேண்டுவதே ஈவானாகிய இறைவன் நம்முள் நின்று உறுதுணை புரிவாராக என வேண்டிக்கொள்கிறேன். அனைவர்க்கும் எனது வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு என் தலைமை உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

" மல்குக வேதவேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளென்றும் பரவுக அறங்கள் இன்பம்
நல்குக உயிர்கட்கெல்லாம் நான்மறைச் சைவம் ஓங்கிப்
புல்குக உலக மெங்கும் புரவலன் செங்கோல் வாழ்க "

—

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சைவ சித்தாந்த மகா சமாஜம்

## 53-வது ஆண்டு நிறைவு விழா, மயிலம்

# சைவ இளைஞர் மாநாட்டுத் தலைமையுரை

[27–12–'58]

[வித்துவான் - திரு. அடிகளாசிரியர்]

அறிவிற் பெரிய இளைஞர்களே !

இன்று நிகழும் சைவ இளைஞர் மாநாட்டில் சிறந்த மூன்று சைவ இளைஞர்களைப் பற்றிக் குறிப்பிட விரும்புகின்றேன். அவர்கள் முருகப்பெருமானும், திருஞானசம்பந்தப் பெருமானும், மெய்கண்டதேவருமாவர். இம்மூன்று இளைஞராலும் சைவ சமயம் நன்கு வளர்க்கப்பெற்றது.

அவர்களுள் முருகப்பெருமான் சிவபெருமானுக்கு ஓரெழுத்துரையின் உண்மைப் பொருளை உரைத்தார் என்றும், அகத்தியர் முதலான பல சிறந்த முனிவர்கட்கு அருளுபதேசம் புரிந்தார் என்றும் நூல்களால் உணர்ந்து கொள்ளுகின்றோம். இம்மயிலம் மடத்தின் அருட்குரவராய் விளங்கிய சிவஞானபாலய அடிகளார்க்கும் முருகப்பெருமான் அருட்குரவராய் விளங்கி அருளுபதேசம் செய்துள்ளனர்.

திருஞான சம்பந்தப்பெருமான் பரசமயக் களைகளைக் களைந்து சைவப் பயிரைச் செழிப்புற வளர்த்தார். இவரை நம்பியாண்டார் நம்பிகள், "இறைவனுடைய திருவருளைத்

தமிழ்நாட்டு மக்களெல்லாம் நன்கு அடையும்படி தமிழால் வழிசெய்தவன் " என்று சிறப்பித்துக் கூறுகின்றார்.

" ஆறதே றுஞ்சடை யானருள் மேவ அவனியர்க்கு
வீறதே றுந்தமி ழால்வழி கண்டவன் மென்கிளிமார்
தேறல்கோ தித்துறு சண்பகம் தாவிச் செழுங்கமுகின்
தாறதே றும்பொழில் சண்பையர் காவலன் சம்பந்தனே "
—ஆளுடை. திருச்சண்பை விருத்தம்

" பொய் காட்டிப் பொய்யகற்றிப் போதானந்தப் பொருளாம் மெய்காட்டும் மெய்கண்டான் " என்று மனவாசகங் கடந்தாரால் சிறப்பிக்கப்பெற்ற மெய்கண்டதேவரால் சைவசமய உலகமே யன்றித் தமிழுலகமும் உண்மைப் பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்கிறது. மெய்கண்ட தேவர் மிக இளையராயிருந்தாலும் அவருடைய உறுப்புகள் உயர்ந்திருந்தன என்று அருணந்தி சிவாசாரியர் குறிப்பிடுகின்றார்.

" கைகண் தலைவாய் கால்செவி மூக்குயர்
மெய்கொண்டு என்வினை வேரறப் பறித்த
மெய்கண்ட தேவ " —இருபாவிருபது-10

இத்தகைய மெய்கண்டதேவர் அருளிய சிவஞான போதத்துள், பதினொன்றும் நூற்பாவினகத்து, " அயரா அன்பின் " என்கின்ற சிறந்த சொற்றொடர் மாணிக்கம்போல் விளங்குகின்றது. " அயரா அன்பு " என்னும் சிறப்புப் பொருளை ஆராய்வதற்கு முன் " அன்பு " என்னும் பொதுப் பொருளை ஆராய்வோம். " அன்பெனப்பது அருட்கு முதலாகி மனத்தில் நிகழும் நேயம் " என்பர் பேராசிரியர். ' அருள் முந்துறுத்த அன்பு ' என்னும் தொல்காப்பியச் சூத்திரப் பகுதிக்கு " பிறர் அவலங்கண்டு அவலிக்கும் அருள் முன் தோற்றுவித்த, அவ்வருள் பிறத்தற்கு ஏதுவாகி எஞ்ஞான்றும் அகத்து நிகழும் அன்பு " என்று உரைகாண்பர் நச்சினார்க்கினியர். இங்ஙனம் அருளுக்கு முதற்காரணமாகக்

கருதப்பட்ட அன்பினை உயிர்கள்மேல் நிகழும் அன்பென்றும், கடவுள்மேல் நிகழும் அன்பென்றும் இரண்டாகக்கொள்ள வேண்டும்.

இறையனர் களவியலுரையாசிரியர் "அன்பு குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும்போல இதுகாண் அன்பு என்று தந்து காட்டலாகாது; அன்புடையரான குணம் கண்டவிடத்து, 'இக்குணங்கள் உண்மையான் ஈங்கு அன்பு உண்டு' என்று அனுமித்துக் கொள்ளற்பாற்று" என்பர்.

வடமொழியாளர் அன்பை 'பிரேமை' என்பர். நாரத பத்தி சூத்திரம் என்னும் வடமொழி நூல் 'பிரேமஸ்வரூபம் அநிர்வசனீயம்' என்று சொல்லுகின்றது. 'பிரேமையின் வடிவம் இத்தன்மைத்தென்று சொல்லக் கூடாததாம்' என்பது அதன் பொருள்.

சிவஞான முனிவர் சிவஞான போதவுரையுள் "அன்பு பத்தி காதல் என்றற்போல்வன இச்சைமிகூர்தற் பொருள" என்பர். 'அநுபூதி நிலைமை' என்னும் நூலார் இறைவன் திருவடிபற்றித் தோன்றும் பத்திக்கு—'அன்பு, பத்தி, ஆதாரம், ஆர்வம், அருத்தி, நேயம், விருப்பு, காதல், இராகம், ஆசை என்று பெயரென்பர்.*

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே "

என்னும் திருமந்திரப் பாட்டில் 'அன்பும் சிவமும் ஒன்றே' என்பது கூறப்பட்டுள்ளது. ஆன்மாக்களாகிய நம்மிடம்

*' அன்பு பத்திகல் லாதாம் ஆர்வம் அங் கருத்தியோ டுறுநேயம்,
இன்ப மார்விருப்புட னெழிற் காதலும் இராகமோ டெலையில்லாத்,
துன்பிலாசையும் எனவிவை ஈசனற் றுணைகழ லுறுபத்திக்கு,
என்பதாம்பரி யாயநற் பெயரென இசைத்தனர் பெரியோரே'
—அநுபூதிநிலைமை

இறைவனைப்பற்றி இடையறாது முறுகி வளரும் அன்பின் முதிர்ச்சியிலே அச்சிவம் விளங்கும். ஆதலால், அன்பும் சிவமும் இரண்டற அபேதமாய் நிற்கும் என்பது இப்பாட்டுள் கூறப்பட்டுள்ளது என்பர் அறிஞர்.

அன்பு சிவத்தை விளைவிப்பதால் அது சாதனமாகும். சிவம் சாத்தியமாகும். சாதன சாத்தியங்கள் தம்முள் வேறுபாடும் உடையன. கருவியும் காரியமுமாகக் கருதப் பட்டுத் தமக்குள் ஒற்றுமையும் உடையன. இவ்வொற்றுமை வகையால் ' அன்பும் சிவமும் ஒன்று ' என்றும் கருதலாம். அன்பும் சிவமும் ஒன்று என்பதைப்பற்றி இங்குக் கூறப் பட்டது ஒரு கருத்தாகும். மற்றொரு கருத்தையும் ஆராய்வாம்.

உயிர்கள் சிற்றறிவும், சிறு இச்சையும், சிறு தொழிலும் உடையன. மேலே குறிப்பிட்ட சிற்றிச்சையின் எழுச்சியே ' அன்பு ' என்று சொல்லப்படும். உயிர்களின் இவ்வன்பு இடையறும் அன்பாகவும், ஒரு நாளைக்கு ஒருநாள் குறையும் அன்பாகவுமே இருக்கும். ஆகையால் நம்முடைய பெரியோர் கள் பேரறிவும், பேரிச்சையும், பெருந்தொழிலும் வாய்ந்த இறைவனிடம் இடையறாமல் நாளுக்குநாள் வளரும் பேரன்பை வேண்டிப் பெற்று, அவ்வன்பே வழியாய் அவன் திருவடிப்பேற்றை அடைந்துள்ளனர்.

இதனை "நின்றன் வார்கழற்கு அன்பெனக்கு நிரந்தரமாய் அருளாய் " "ஆடகச்சீர் மணிக்குன்றே! இடையறா அன் புனக்கென் ஊடகத்தே நின்றுருகத் தந்தருள் எம் உடை யானே!" என்று மணிவாசகப்பெருமான் கூறுவதால் உணர்ந்து கொள்ளலாம்.

அடியார்கள் இறைவன்மேல் கொண்ட அன்பு ஒரு நாளைக்கு ஒருநாள் சுருங்குவதாயிராமல் வளரும் அன்பாக இருக்கும் என்பதைக் " கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினார் " (கூடும் அன்பு - ஒருகாலைக்கொருகால் பெருகும் அன்பு) என்று சேக்கிழார் பெருமான் கூறும் கூற்றால் உணர்ந்து கொள்ளலாம்.

உலக இன்பங்களை வெறுத்து உலகத் தோற்றத்தைப் பொய்யென்று கருதியிருக்கும் அறிஞர்க்கு இறைவன் மிகுந்த பேரன்பை அருளி, அவ்வன்பின் வழியாகவே எங்குமிலாப் போகத்தைப் புரிந்து அவர்களிடம் புகுந்து நிற்பன்'' என்பர் அருணந்தி சிவாசாரியர்.

" குறித்தடியின் நின்றட்ட குணமெட்டுச் சித்தி
கோகனதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்
வெறுத்துநெறி அறுவகையும் மேலொடுகீ ழடங்க
வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ ழில்லான்
நிறுத்துவதோர் குணமில்லான் தன்னையொரு வர்க்கும்
நினைப்பரியான் ஒன்றுமிலான் நேர்படவந் துள்ளே
பொறுப்பரிய பேரன்பை அருளியதன் வழியே
புகுந்திடுவன் எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே ''
—சித்தியார் 9-6

'பொறுப்பரிய பேரன்பு' என்னுஞ் சொற்றொடரை 'சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கிவள், உயிர் தவச் சிறிது காமமோ பெரிதே' என்னும் சங்கச் செய்யுளுடன் ஒப்பிட்டு உணரவேண்டும். இறைவன் பெரியோனுகையால் அவன் கொடுக்கும் அன்பும் பேரன்பாகத்தானே இருக்கும்.

இவ்வன்பு பல பிறப்புக்களிலே பயன் குறியாது செய்த அறத்தின் மிகுதியால் இறைவன் அருள்புரிய வரும் என்பதை " ஆங்கவனருளாற் பத்திநன் குண்டாம் பத்தியால் அவனருள் உண்டாம்! வீங்கியபத்தி பற்பல பிறப்பில் வேதங்களுரைத் திடும்படியே, தீங்கறு கருமம் இயற்றிய பலத்தால் சிவனருள் செய்திட வருமால்! ஓங்கிய பத்தியாற்சிவ தருமம் ஒழிவறப் புரிந்திடப் படுமால் '' என்னும் வாயுசங்கிதைச் செய்யுளால் அறிந்து கொள்ளலாம். இறைவன்மேற் காதல் இறைவன் அருள வரும் என்பதை,

" காதல் வழிசெய்த கண்ணுதல் அண்ணலைக்
காதல் வழிசெய்து கண்ணுற நோக்கிடில்

காதல் வழிசெய்து கங்கை வழிதரும்
காதல் வழிசெய்து காக்கலும் ஆமே"

என்னும் திருமந்திரத்தாலும் அறியலாம்.

மேலே கூறிய மேற்கோள்களால் "இடையறாமல் நாளுக்கு நாள் வளரும் பொறுப்பரிய பேரன்பு" இறைவன் ஆன்மாக்களின் பக்குவநிலை நோக்கி அருள வரும் என்பதை அறிந்து கொண்டோம். இவ்வன்பை இறைவன் தன்னிடமுள்ள தாதான்மிய சத்தி, பரிக்கிரக சத்தி என்னும் இரண்டு சத்திகளுள் அன்பே வடிவாகிய தாதான்மிய சத்தியால் கொடுக்கிறான். இச்சத்தி பராசத்தி என்றும் கூறப்படும். (தாதான்மியம் - இறைவனிடம் வேறுபடாமல் ஒன்றுபட்டு நிற்பது ; பரிக்கிரக சத்தி - வேண்டும் பொழுது உபகாரப் படுத்துவதாய்த் தன்னுள் அடக்கிவைத்திருக்கும் சத்தி ; பின்ன சத்தி ; அதாவது மாயை.)

இருக்குவேதப் பகுதியானது, (10 - 129 - 1, 2, 4.) "மகாப்பிரளயத்தில் அசத்தும் இல்லை ; சத்தும் இல்லை ; அந்த ஒன்று இருந்தது ; அதினின்று காமம் எனப்படும் சத்தி உளதாயிற்று" என்று கூறுகின்றது.

இதனால் உலகப் படைப்புக்குக் காரணமாக முதலில் தோன்றிய சத்திக்குக் (காமம்) என்று பெயரிருத்தலை அறிந்து கொள்ளுகின்றோம். காமம் என்பதற்கு இச்சை என்று பொருளிருத்தலை "இச்சா மனோவேள காமேள" என்னும் வடமொழி நிகண்டால் அறியலாம். மகாப்பிரளயத்திற்குப் பின் உலகங்களை உண்டாக்க வேண்டும் என்று இறைவனிடம் எழுந்த இச்சையே 'காமம்' என்று இருக்கு வேதத்தால் சொல்லப்பட்டுள்ளது. (உமா தேவிக்குச் 'சிவகாமி' என்றும், 'காமரூபிணி' என்றும் பெயரிருத்தலை நாம் இங்கே எண்ணிப் பார்க்கவேண்டும்.) இறைவனிடம் தாதாந்மிய சக்தியாய் உள்ளது பராசக்தி என்றும், அது ஆனந்தவடிவாகவும், அறிவுருவாகவும், கருமமாகவும், இச்சையாகவும் விளங்கும் என்றும் திருமூலர் கூறுகிறார் :

" அறிவார் பராசத்தி ஆனந்த மென்பார்
அறிவார் அறிவுரு வாமவள் என்பார்
அறிவார் கருமம் அவளிச்சை என்பார்
அறிவார் பரனும் அவளிடந் தானே "

அத்தகைய பராசக்தி பக்குவம் நோக்கிச் சிவகதி அருளும் என்பதை,

" அளியொத்த பெண்பிள்ளை ஆனந்த சுந்தரி
புளியுறு புன்பழம் போலுள்ளம் நோக்கித்
தெளியுறு சித்தச் சிவகதி காட்டி
ஒளியுற வைத்தென்னை உய்யவுண் டாளே "

என்னும் திருமூலர் கூற்றால் அறிந்துகொள்கின்றோம்.

காமம் எனினும் இச்சை எனினும் அன்பினைக் குறிக்குமாதலால், இறைவனிடம் உள்ளதும் காமம் இச்சை என்று பெயர் கூறப்பட்டதும் ஆகிய அன்புச் சத்தியானது பக்குவமான ஆன்மாக்கட்குப் பொறுப்பரிய பேரன்பைத்தர, அவ்வன்பை அவ்வான்மாக்கள் இறைவனிடம் செலுத்தி அவன் திருவடிப் பேற்றை அடைகின்றன.

இறைவனை அடைதற்குக் கருவியாகக் கொண்ட அன்பின் பரம்பரையை அறிவால் ஆராய்ந்துணர்ந்தால் அது இறைவனிடமே சென்று முடிதலின், 'அன்பென்றும் சிவமென்றும் இரண்டில்லை' என்று திருவாய் மலர்ந்தருளினர். 'அன்பும் சிவமும்' என்னும் திருமந்திரப்பாட்டு

" அன்பு சிவமென் றறியார் இரண்டென்பர்
அன்பு சிவமென் றறிவார்க் கிரண்டில்லை
அன்பு சிவமென் றறிவால் அறிந்தபின்
அன்பே சிவமாய் அறிந்துகொண் டேனே "

என்ற வடிவில் முத்தி நிச்சய உரையுள் காணப்படுகின்றது. இறைவன் அன்பின் வடிவாய் இலங்குகின்றான் என்பதை

" அன்பும் அறிவும் அடக்கமு மாய்நிற்கும்
இன்பமும் இன்பக் கலவியுமாய் நிற்கும்
முன்புறு காலமும் ஊழியு மாய்நிற்கும்
அன்புற ஐந்தின் அமர்ந்துநின் றானே "

என்னும் திருமந்திரத்தால் அறிந்துகொள்ளலாம்.

## அயரா அன்பு

மெய்கண்ட தேவர் தாம் செய்த சிவஞானபோதம் என்னும் சிறந்த நூலுள் உண்மை அதிகாரத்துள் பயனியலிலுள்ள மூன்று சூத்திரத்துள் நடுநாயகமாய் விளங்கும் 'காணுங் கண்ணுக்கு' என்னும் சூத்திரத்திலே அயரா அன்பைப்பற்றிக் கூறுகிறார். அவர் 'அன்பு' என்று குறிக்காமல் 'அயரா அன்பு' என்று சிறப்பித்துக் குறித்த கருத்தை நாம் உணர்ந்துகொள்ளல் வேண்டும்.

நாரத பக்தி சூத்திரம் என்னும் வடநூல் பத்தியைக் கனிட்ட பத்தி, பிரேமபத்தி, பராபத்தி என்று மூவகைப்படுத்தி ஓதுகிறது. கனிட்டபத்தி தொடக்க நிலையில் இருப்பது. இது சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதசேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம் என்று ஒன்பது வகைப்படும். இது தொடக்க நிலையில் இருப்பதால் 'கனிட்ட பத்தி' என்று பெயர் கூறப்படுகிறது.

இரவு பகல் எப்பொழுதும் கடவுளாகிய ஒருபொருளிலேயே விருப்பத்தை வைத்திருப்பது பிரேமபத்தியாகும். " உனக்குப் பயித்தியம் பிடிக்குமானால் அது பகவான் அன்பால் உண்டாகட்டும் " என்று பெரியார் இராமகிருஷ்ண பரம ஹம்சர் அருளியதை இங்கே எண்ணிப்பார்க்கவேண்டும்.

பராபத்தி என்பது இறைவனுக்கும் தனக்கும் விட்சேபமில்லாமல் பத்திசெய்வது. அதாவது பிரிப்பில்லாமல் பத்தி செய்வது. இப்பத்தியே மேற்கூறிய இரண்டு பத்தியினும் மிகச் சிறந்த பத்தியாகும். வடமொழிச் சிவஞானபோதம் பதினோராம் சுலோகத்தில் " தன்னோடு பிரிவில்லாம லிருந்து உபகாரம் செய்துவரும் சிவனிடத்தில் பராபத்தியைச் செய்க " என்று, இப் பராபத்தி குறிப்பிடப் பெற்றுள்ளது.

இப் பராபத்தியை நம் மெய்கண்ட தேவர் ' அயரா அன்பு ' என்று அழகான தமிழ்ச் சொல்லால் குறிப்பிடுகின்றார்.

அயர்தல் என்றால் மறந்து விடுதல் ; அயராமை என்றால் மறந்து விடாமை ; எதனை மறக்காவிடாமை எனில் ? இறைவன் உயிராகிய நம்முடன் கலந்து நின்று நமக்குப் பொருளை அறிவித்தும் அறிந்தும் உபகரிக்கும் அத்துவித நிலையை மறந்துவிடாமையாம். இறைவன் நமக்கு வேறாக இலன் ; நம்மை இயக்கிக்கொண்டு உடனுயுள்ளான் என்று தெளிவாக அறிந்து அன்பு செய்தலே அயரா அன்பு என்னும் பராபத்தியாகும். இப்பத்தி இறைவன் திருவடியாகிய சிவானந்தானுபூதியைத் தருகின்றது. மேலே சொன்ன கனிட்ட பத்தி பிரேம பத்தி இரண்டும் இறைவனைத் தன்னின் வேறாக வைத்துப் பத்தி செய்வதாம். அயரா அன்பாகிய பராபத்தியோ இறைவன் தன்னோடு கலந்து விளங்குகின்றான் என்பதை அறிந்து தன்னோடு சேர வைத்துப் பத்தி செய்கலாம். இறைவனைத் தனக்கு அந்நியமாக வைத்துப் பத்தி செய்வதிலும் அநந்நியமாக வைத்துப் பத்திசெய்தல் மேலான தாகையால் அது பராபத்தி என்று வழங்கப்படுகிறது. சிவஞானபோதம் எட்டாம் சூத்திரம் " அந்நியமின்மையின் அரன்கழல் செலுமே " என்று செப்புவதுங் காண்க.

அநந்ய யோகத்தால் இறைவனை உபாசிக்க வேண்டும் என்பதை, பகவத்கீதை 12 - சுலோகத்தாலும் உணரலாகும். வியாச சூத்திரம் ' அநந்யாதிபதி ' என்று இறைவனுடைய குணத்தைக் குறிக்கின்றது.

இறைவன் பெத்தம் முத்தி இரண்டிலும் ஆன்மாக்களுடன் கலந்து நின்று உபகரித்து வரும் தன்மையைத் திருநாவுக்கரசர்,

"கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளியே னாகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நாளும் விலாவிறச் சிரித்திட் டேனே "

என்று கூறுவதாலும் உணர்ந்து கொள்ளலாம்.

மணிவாசகப் பெருமானால் இடையறா அன்பென்றும், சேக்கிழார் பெருமானால் 'கூடும் அன்பெ'ன்றும், மெய்கண்ட தேவரால் 'அயரா அன்பெ'ன்றும் குறிக்கப்பெற்ற பராபக்தி யானது உலக அல்லலில் உழன்று வருந்திய அறிஞர்க்கு மன அமைதியையும் மேலான இன்பத்தையும் கொடுப்பதா யுள்ளது. நாரத பக்தி சூத்திரம் என்னும் நூல் பராபக்தி சாந்திரூபமாகவும், பரமாநந்த ரூபமாகவும் இருக்கின்றது என்று கூறுகின்றது.

கடவுள் இன்பத்தை அடைவதற்கு அன்பே சிறந்த கருவியாயுள்ளது என்பதை,

" செய்கதவம் செய்கதவம் நெஞ்சே ! தவம்செய்தால்
எய்த விரும்பியதை எய்தலாம்—வையகத்தில்
அன்பிற் சிறந்த தவமில்லை அன்புடையார்
இன்புற்று வாழ்தல் இயல்பு "

என்னும் பாரதியார் அருமைத் திருவாக்கால் உணர்ந்து கொள்ளலாம். இத்தகைய அன்பைப் பெறுவது நமது குறிக்கோளாக இருக்கவேண்டும் என்றுகூறி எனது சொல்லை முடித்துக்கொள்கின்றேன். அன்பே சிவம்.

——

# சமாஜ விழாவும் வேண்டுகோளும்

(முருகவேள்)

நமது சமாஜத்தின் 53-ஆம் ஆண்டு நிறைவு விழா, மயிலத்தின்கண் ஸ்ரீலஸ்ரீ சிவஞானபாலைய தேசிக சுவாமி களின் அருளாதரவின் துணைகொண்டு, 1958 டிசம்பர் 27, 28, 29-ம் நாட்களில் மிகவும் சிறப்புற நடைபெற்றது. ஞானியார் அடிகள் நினைவுமலர், சிவஞானபோதம் என்னும் இரு நூல்கள் விழாவின்போது வெளியிடப்பெற் றன. (விவரங்கள் அடுத்த இதழில் வெளிவரும்.)

விழாத் தலைவர் சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ.,எல்.டி. அவர்களும் மற்றும் சிலரும் குறிப் பிட்டதுபோல, முன்பு 1940-ஆம் ஆண்டில், அஞ்ஞான்று விழாவிற் கலந்துகொண்ட அரசியல் அலுவலாளர்களின் கண்ணோட்டமும் தண்ணளியும் பெறுதற் பொருட்டுக்

கூடிய மக்கட்டிரளின் எண்ணிக்கை ஒன்றே கருதாமல், இவ்வாண்டில் உண்மை அன்பும் ஈடுபாடுமே காரணமாக வேறு பிற நோக்கங்கள் இன்றி ஆர்வம் ஓங்கக் கூடிய சைவப் பெருமக்களின் நருநியை உணர்ந்து நோக்கின், அண்மையில் நிகழ்ந்த நமது சமாஜ விழா அரும்பெரும் வெற்றியே என ஐயுறவின்றிக் கூறலாம். இவ்வாண்டில் சைவ இளைஞர் மாநாட்டில் மயிலம் தமிழ்க் கல்லூரி மாணவர்கள் பதினறுவர் (16) கலந்துகொண்டு உணர்ச்சி மிகச் சொற்பொழிவுகள் ஆற்றியமை பெரிதும் போற்றுதற் குரியதாக விளங்கியது. இங்ஙனம் வெற்றியான முறையில் நமது சமாஜ விழா நடைபெறுதற்குத் துணைபுரிந்த அனைவர்க்கும் - சிறப்பாக ஸ்ரீலஸ்ரீ சிவஞானபாலைய தேசிக சுவாமிகள் அவர்களுக்கும், மாநாட்டு வரவேற்புச் செயலாளர் மயிலம் பொம்மபுர ஆதினப் புலவர் திரு. சி. துரைசாமி அய்யர் அவர்களுக்கும் - நமது சமாஜத்தின் நன்றி பெரிதும் உரியதாகும்.

கடந்த அரை நூற்றாண்டுகட்கு மேலாக நம் சமாஜம் ஆற்றி வரும் தொண்டுகள் அளவிடற்கரியனவாகும். நாடறிந்த மாபெருஞ் சமய மன்பதைப் பொது அமைப்பாக விளங்கி வரும் சமாஜத்தினை நன்கினிது வளர்ந்தோங்கச் செய்தல் நல்லோர் அனைவர்க்கும் கடமையாகும். பண்டைக் கல்வெட்டுகளில் "பன்மாகேஸ்வா ரட்சை" என்னும் தொடர் காணப்படும். அதன் பொருள், இவ்வறத்தினைக் காப்பாற்றும் கடமை அறத்திற் கருத்துடைய அடியார்கள் அனைவர்க்கும் உரியது என்பதாகும். அதுபோல, நமது சமாஜமும் 'பன்மாகேஸ்வர ரட்சையே' ஆகும்; அதாவது, நமது சமாஜத்தினை வளர்த்துக் காக்கும் கடமையும் பொறுப்பும் தமிழும் சமயமும் போற்றும் தக்கார் அனைவருக்கும் உண்டு என நினைவூட்டி வற்புறுத்துகின்றோம்!

எனவே, சமாஜ விழாக்களில் நம்மைத் தழுவிக்கொள்ள வில்லையே என்றோ - பிறவாறோ எவரும் எண்ணித் தயங்குதல் வேண்டா! "God is more willing to give than we are to receive" எனச் சான்றோர் ஒருவர் மொழிந்தமைபோல, அன்பர்கள் பணியாற்ற முன்வராத குறையே யன்றிச் சமாஜம் இடன் அளித்திலது என்னும் குறையில்லை. ஆதலின் அன்பும் ஆர்வமும் உடையவர் அனைவரும்

சமாஜ உறுப்பினராகச் சேர்ந்தும், பிறரைச் சேர்ப்பித்தும் பணிபுரிய முன்வர வேண்டுகின்றோம். தமிழ் அறிஞர்களும், தமிழ்க் கல்லூரிகளிற் பயிலும் இளைஞர்களும், தமிழ்க் கழகங்களின் அமைப்பாளர்களும் பிறருமெல்லாம், சமாஜ உறுப்பினர்களாகிச் சமாஜத்துடன் தொடர்புகொண்டு தமிழ்ப் பணியும் சமயப் பணியும் புரிதற்கு முன்வரும் கடப்பாடு உடையவர்களாவர். சமாஜ உறுப்பினர்களும் மாவட்டப் பிரதிநிதிகளும் பிறரும் சமாஜ வளர்ச்சியிற் கருத்தூன்றித் தத்தம்மால் இயன்ற அளவு, உறுப்பினர் களின் எண்ணிக்கையைப் பெருக்குதற்கும் பிறவற்றிற்கும் துணைபுரியக் கேட்டுக் கொள்கின்றோம்.

---

## " உண்மை விளக்கம் "

[ஸ்ரீலஸ்ரீ சம்பந்த சரணாலயத் தம்பிரான் சுவாமிகள்
(சிவக்கவிமணி - C. K. சுப்பிரமணிய முதலியார், பி.ஏ.),
பெரியபுராண விரிவுரை யாசிரியர், கோவை]

" கல்லா னிழல்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே " —சிவஞானபோதம்

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண் —திருவருட்பயன்

வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா
உண்மை விளக்கம் உரைசெய்ய—திண்மதஞ்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியில்வைப் பாம் " —உண்மை விளக்கம்

சைவ சித்தாந்தம்

" சித்தாந்தம் " என்றால் சைவ சமயத்தின்—சைவர் களால்—கொள்ளப்பட்ட முடிவுகள் என்று பொருள் கொள்கிறார்கள். அது சரியன்று. சைவம் என்பது ஈண்டு " சைவ முதலாம் அளவில் சமயமும் வகுத்து மேற் சமயங் கடந்த மோன சமரசம் வகுத்த நீ " என்ற இடத்திற் கூறியதுபோலச் சமயாதீதமான நிலை என்று பொருள் கொள்ளு

தல் வேண்டும். இறைவனருள் கொண்டு முழுஞானிகள் கண்ட முடிபுகளாகிய ஞானத் தொகுதியே சைவ சித்தாந்தம் எனப்படும். இவைகள் பதிவாக்காகிய வேதசிவாகமங்களின் முடிந்த முடிபுகள். இவைகள் எந்தக் காலத்திலும் எந்த இடத்திலும் மாறுபாடு அடையாத உண்மைகளாம். இவைகள் தோன்றிய அந்தக்காலத்திலும் சரி; சந்திரனையும், சூரியனையும் பிற அண்டங்களையும் எட்டிப் பிடிக்க மனிதன் முயல்கின்ற இந்தக்காலத்திலும் சரி; இனி எந்தக் காலத்திலும் சரி மாறாத உண்மைகளாகும்.

கடவுள் ஒருவர் உண்டு. உயிர்கள் பல உண்டு. உயிர்களைக் கட்டிய அறியாமை என்பன முதலாகிய பாசங்கள் உண்டு. அந்தக் கட்டுக்களை நீக்கி முழு அறிவையடைவதே ஆனந்தம் என்றவை போன்ற உண்மைகள் எந்தக் காலத்துக்கும் எந்த இடத்துக்கும் ஏற்கப்படக் கூடிய மாறுபடாத தன்மையுடையவை. அமரிக்காவோ - உருசியாவோ - இங்கிலாந்தோ - செர்மெனியோ - இந்தியாவோ - பாகிஸ்தானமோ எந்த நாடாயினும் சரியே இவை மாறுபடா. வேதசிவாகமங்கள் இவ்வுண்மைகளை மிக விரிவாகக் கூறும். அவற்றின் சார சங்கிரமமாக விளங்குவன சைவ சித்தாந்தம். இவ்வுண்மைகளை 14 சாத்திரங்களாகத் தமிழில் வகுத்துரைத்துள்ளார்கள் நமது பெரியோர்.

**சைவ சித்தாந்த சாத்திரங்கள் 14**

ஆன்றோர்களால் ஞானசாத்திரங்கள் 14 ஆகத் தொகுக்கப்பட்டுள்ளன. அவை,

உந்திகளிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் உற்று

என்னும் பாட்டினால் அறிவிக்கப்பட்டபடி,

(1) திருவுந்தியார். (2) திருக்களிற்றுப்படியார். (3) சிவஞானபோதம். (4) சிவஞானசித்தியார். (5) இருபா இருபஃது. (6) உண்மை விளக்கம். (7) சிவப்பிரகாசம். (8) திருவருட்பயன். (9) வினாவெண்பா. (10) போற்றிப்

பஃறொடை. (11) கொடிக்கவி. (12) நெஞ்சுவிடுதூது. (13) உண்மைநெறி விளக்கம். (14) சங்கற்ப நிராகரணம் என்பன. இவற்றை அருளிய ஆசிரியன்மார்கள் அறுவர். அவர்களாவர் (1) திருவியலூர் உய்யவந்ததேவ நாயனார். (2) திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார். (3) மெய்கண்டதேவ நாயனார். (4) அருள்நந்தி சிவாசாரியர். (5) அதிகை மனவாசகங்கடந்த தேவ நாயனார். (6) உமாபதி சிவாசாரியார் என்னும் பெரியோர்கள். திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் காலத்தால் முற்பட்டவை. ஏனையவை எல்லாம் சிவஞான போதத்தின் வழி வந்த பிற்பட்ட நூல்கள். சிவஞான போதமும் சிவஞான சித்தியாரும் சிவப்பிரகாசமும், முதனூல் வழிநூல் சார்பு நூல் எனப்பட்டு ஒருதொடர் புடையன. சிவப்பிரகாசம் புடைநூல் என்பர் சிவஞானமுனிவர். திருவுந்தியாரின் ஆசிரியருடைய மாணவரின் மாணவர் திருக்களிற்றுப்படியாரின் ஆசிரியர். திருவுந்தியார் பொதுவாகச் சைவ சித்தாந்த உண்மைகள் பலவற்றை உபதேசிக்கின்றது. அதன் வழியாய்-ஏறக்குறைய அதன் விரிவாய் விளங்குவது, திருக்களிற்றுப்படியார். சிவஞான போதமும் சித்தியாரும் பிரகாசமும் சிவஞானபோதத்தில் விதித்த வகையிலே பதி பசு பாசமாகிய முப்பொருளினுண்மையும், முப்பொருளினிலக்கணமும் பாசநீக்கத்துக்குரிய சாதனமும் பாச நீக்கமும் சிவப்பேறுமாகிய பயனும் சாங்கோபாங்கமாக முறையாய் வகுத்துக் கூறுவன. உண்மை விளக்கமானது மாணுக்கன் கேட்ப விடைகூறி அறிவுறுத்தும் வகையில் பாடபுத்தகமாக அமைந்துள்ளது. ஏனையவற்றுள் சங்கற்ப நிராகரணமும், சித்தியாரின் பரபக்கமும், அகப்புறம், புறமாகிய சமயங்களின் நிலைகளை எடுத்துக்கூறி மறுக்கின்றன. ஏனைய சாத்திரங்கள் சித்தாந்த ஞானமுடிவுகளில் ஒவ்வொன்றையோ, பலவற்றையோ விதந்து கூறுவன.

சைவ சித்தாந்தம் சிவ ஆகம ஞானம்

சைவ சித்தாந்த சாத்திரங்கள் முதல் நூல்களென்றும், அவற்றினின்றும் தொடங்கியது சைவசித்தாந்த மென்றும் சிலர் கருதுகிறார்கள். அது சரியன்று.

" வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும் "

என்றபடி, முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானது திரு வாக்குகளாகிய வேதசிவாகமங்களே முதனூல்களாகும். வேதம்பொது; சிவாகமங்கள் சிறப்பு. வேதங்கள் உலகர்க்கும் சிவாகமங்கள் சத்தினிபாதர்களுக்கும் ஆமென்று வகுத்துள்ளார்கள். ஆசிரியர் சேக்கிழார்பெருமான் " உலகியல் வேத நூலொழுக்க மென்பதும், நிலவும் மெய்ந்நெறி சிவநெறியே என்பதும் " என்று வகுத்தருளினர். வேதசிரமாகிய உபநிஷத்துக்களும், சிவாகமங்களின் ஞான காண்டங்களும், இவ்வுண்மையை விளக்குவன.

சமயாசாரியர்களும் சந்தானசாரியர்களும்

இந்த ஞானத் தொகுதியைச் சிவபெருமான் நேரேயும் வெளிப்பட்டும் உபதேசிப்பார். உபதேசக் கிரமத்தில் தமது அருள் பெற்றவர்கள் மூலமாகவும் உபதேசிப்பர். நேரே அவ்வப்போது உபதேசிக்கப் பெற்றவர்கள் நமது சமயாசாரியர்கள். திருஞானசம்பந்த நாயனர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர் என்னும் இம்மூவர்களுக்கும் நேரே எழுந்தருளி உபதேசித்தார். திருவாதவூரடிகளுக்குக் குருவாக வந்து உபதேசித்தார். அவருக்கு உபதேசித்தது சிவஞானபோத மென்பர். எனவே இந்நால்வர்களும் உபதேச பரம்பரையினன்றி நேரே அருள்பெற்ற ஆசாரியர்களாம். அதனல் அவர்கள் தனித்தனி சமயாசாரியர்கள் எனப் பெறுவர். சிவபெருமான் நேரே திருநந்தி தேவருக்குச் சிவாகம உண்மைகளை உபதேசிக்க அவர் சனற்குமாரர்க்கும் அவர் சத்தியஞான தரிசனிகளுக்கும் வழிவழி உபதேசித்தனர். பரஞ்சோதியார் இவ்வுலகில் வந்து மெய்கண்ட தேவநாயனர்க்கும், அவர் அருணந்தியாருக்கும், அவர் மறைஞானசம்பந்தருக்கும், அவர் உமாபதி சிவனருக்கும் வழிவழி உபதேசித்தனர். ஆதலின் முன்னைய நால்வர்களும் அகச்சந்தானம் என்றும், பின்னைய நால்வர்களும் புறச்சந்தானம்

என்றும் வழங்குவது மரபு. ஆதலின் வழிவழி ஆசாரியனும் மாணாக்கர்களுமாய் வருதலின் இவர்கள் சந்தானசாரியர்கள் என்றும் அழைக்குவர்.

சமயாசாரியர்கள் இறைவரால் நேரே உபதேசிக்கப் பெற்றவர்கள் என்று மேலே சொன்னோம். அவர்களுள் தேவாரம் அருளிய மூவர் முதலிகள் வரலாறும், அவர்கள் உபதேசம் பெற்ற வரலாறும், திருத்தொண்டர் புராணத்துள் விரிவாகப் பேசப்பெற்றுள்ளது. அது நடராஜப் பெருமான் திருவருட்டுணையால் சேக்கிழார் பெருமானால் அருளப் பெற்றது. ஒருவரை ஞானப்பால் கொடுத்தும் ஒருவரைச் சூலை நோய் கொடுத்தும் ஒருவரை வழக்கிட்டு ஓலை காட்டியும் ஆட்கொண்டருளிய வரலாறுகள் கேட்கின்றோம். அவ்வாறு அவர்கள் குருவருள் பெற்றனர் என்பதை அகத்தியனார் அருளினர். "தோடு கூற்று பித்தா மூன்றும், பீடுடைத் தேசிகன் பேரருளாகும்" என்பதனாலும், இம்மூன்றுக்கும் குருவருள் என்று தலைப்பெய்தமையாலும் அறியப்படும். திருவாதவூரடிகளை இறைவரே குருவடிவாய் வந்து உபதேசித்த வரலாறு, திருவாதவூரடிகள் புராணம் திருவிளையாடற் புராணம் முதலியவற்றுள் பேசப்பெற்றது.

இது போன்ற வரலாறுகள் சந்தானசாரியர்களுக் கில்லாதது பெருங்குறையே யாகும். கர்ணபரம்பரையாகச் சிற்சில செய்திகளே கேட்கப்படுகின்றன. அவர்கள் பெயர் தாமும் வழக்கத்திலிருந்து அறிய உள்ளன.

சந்தானசாரியர்கள் அருளியவை முதனூல்களா ? என்பதொரு கேள்வி. சிவஞானபோதம் முதனூலா ? மொழி பெயர்ப்பா ? என்பதும் ஆராய்ச்சிக்கிடமாக வுள்ளது. மெய்கண்ட தேவருக்கு முன்பே சைவசித்தாந்த உண்மைகள் தமிழ்மொழியில் உண்டு என்பது வெளிப்படை. இவ்வுண்மைகள் உபதேசக் கிரமத்தில் வழி வழி வந்தன என்பதும் மறுக்கப்படாத உண்மை. மொழி பெயர்ப்பாக இல்லாவிட்டாலும் உபதேச மொழிகளின் தொகுப்புக்கள் என்பது மறுக்கப் படாத உண்மை.

இனி, இவற்றுள் "உண்மை விளக்கம்" என்னும் அருணூல்பற்றிச் சில பொருள்களைச் சற்று விரிவாகப் பேசுவோம்.

இதனை அருளியவர் திருவதிகை மனவாசகங் கடந்த நாயனுர் என்பது மட்டும் உறுதியாக அவர் வாக்கினலேயே அறிகின்ருேம். அந் நூலினிறுதியில் "மன்னதிகை வாழும் மனவாசகங் கடந்தான்" என்று பொறித்துள்ளவாற்ருல் இதனை அறிகின்ருேம். அதனுல் அவர் திருவதிகையில் வாழ்ந்தனர் என்றும் அறிகின்ருேம். ஆசிரியர்களே தமது பெயரைப் பொறித்தல் ஒரு நல்ல வழக்கு. திருஞானசம்பந்தர் தேவாரங்களிலெல்லாம் திருக்கடைக் காப்பில் தமது பெயரை முத்திரையிட்டருளி யுள்ளார். இவர் மெய்கண்ட தேவருடைய மாணக்கர் என்று சொல்லப்படுகின்றது. இவரைப் பற்றிய வேறு வரலாறுகள் ஒன்றும் புலப்படவில்லை. திருவதிகையில் அவர் சந்ததியில்லை. இந்நூல், ஒரு பக்குவமுடைய மாணக்கருக்கு இவர் உபதேசித்த உருவமாக அமைந்துள்ளது. மாணக்கர் வினவுவதாகவும் இவர் விடை சொல்வதாகவும் அமைந்துள்ளது.

அவ்வினக்களாவன :—(1) ஆருறுதத்துவம் ஏது? (2) ஆணவம் ஏது? (3) அன்றேதான் மாருவினையேது? (4) நான் (உயிர்) ஏது? (5) நீ (பதி) ஏது? (6) நாதன் நடம் அஞ்செழுத்துத்தான் ஏது? என்பன. 6-வது வின (1) நாதன் நடம் (2) அஞ்செழுத்து என்ற இரண்டு உட்பிரிவுகளையுடையது. இவற்றுக்குப் பாடம் சொல்வதுபோல, முறையாக ஆசிரியர் விடை சொல்லுகிருர்.

**1.** தத்துவங்கள் (36) :—அவை (1) ஆன்ம தத்துவம் 24. (2) வித்தியா தத்துவங்கள் 7. (3) சிவதத்துவங்கள் 5 என்று மூவகைப்படும். இவை மாயாமலம் என்று நூல்கள் பேசும். இவை உயிர் விளக்கத்தின் பொருட்டு இறைவனுற் றரப்படுவன.

(அ) பஞ்ச பூதங்கள் 5: பூதம் - மண், புனல், அனல், கால், ஆகாயம்.

வடிவம் - நாற்கோணம், சந்திரனில் பாதி, முக்கோணம், அறுகோணம், வட்டம்.

நிறம் - பொன், வெண்மை, சிவப்பு, கருமை, தூமம்.

குறி - குலிசம், கோகனகம், சுவத்தி, அறு புள்ளி, விந்து.

அதிதெய்வம் - அயன், மால், உருத்திரன், மகேசன், சதாசிவர்.

அதிதெய்வத்தின் தொழில் - படைப்பு, அளிப்பு, துடைப்பு, மறைப்பு, அனுக்கிரகம்.

செயல் - கடினமாய்த் தரித்தல், குளிர்ந்து பதஞ் செய்தல், ஒன்றுவித்தல், திரட்டுதல், நிரந்தரமாய் நிறைதல்.

எழுத்து - ல, வ, ர, ய, அ.

(ஆ) ஐம்புலன் 5 : ஓசை, பரிசம், உரு, சுவை, நாற்றம்.

(இ) ஞானேந்திரியம் 5 : ஐம்பூதங்களிடமாகச் சத்தாதிகளை அறியும். தானங்களாவன முறையே, செவி, தோல், கண், நாக்கு, மூக்கு.

வானம் இடமாகச் செவி ஓசையையும், கால் இடமாகத் தோல் பரிசத்தையும், அனல் இடமாகக் கண் உருவத்தையும், நீர் இடமாக நா இரதத்தையும், மண் இடமாக மூக்கு மணத்தையும், அறியும்.

(ஈ) கன்மேந்திரியங்கள் 5 : வாக்கு- ஆகாயம் இடமாக வசனிக்கும், பாதம் - கால் இடமாகப் போகும். பாணி - அனல் இடமாக ஏற்கும். குதம் - நீர் இடமாக மலாதி விடும். உபத்தம் - மண் இடமாக விந்து விடும்.

(உ) அந்தக்கரணங்கள் 4 : மனம், புத்தி, அகங்காரம், சித்தம்.

தொழில் - பற்றுதல், நிச்சயித்தல், எழுதல், சிந்தித்தல்.

(அ) பூதம் (5), (ஆ) புலன் (5), (இ) ஞானேந்திரியம் (5), (ஈ) கன்மேந்திரியம் (5), (உ) அந்தக்கரணம் (4)

என்ற இவ்விருபத்து நான்கும் ஆன்ம தத்துவங்களெனப் படும்.

2. வித்தியா தத்துவங்களாவன 7: (1) காலம், (2) நியதி, (3) கலை, (4) வித்தை, (5) அராகம், (6) புருடன் (7) மாயை என்ற ஏழுமாம். இவற்றின் றொழிலாவன :

" எல்லைபலம் புதுமை யெப்போதும் நிச்சயித்தல்
அல்லல் தருங்கிரியை ஆன்மாவுக்—கொல்லை
அறியாமை யைம்புலனு மாரவருங் காலம்
குறியா மயக்கென்று கொள் "

எனப்படும்.

3. சுத்த தத்துவங்கள்—சிவதத்துவங்கள் 5 :

(1) சுத்த வித்தை, (2) ஈசுரம், (3) சதாசிவம் - சதாக்கியம், (4) சத்தி, (5) சிவம்.

இவற்றின் றொழிலாவன : சுத்த வித்தை ஞானத்தை மிகுவிக்கும்.

ஈசுரம் : சிவத்தொழிலை அதிகமாக்கும்.

சதாசிவம் : ஞானமும் கிரியையும் ஒத்திருக்கும்.

சத்தி : கிரியைக் காதாரம்.

சிவம் : ஞான உரு.

இவ்வாறு முப்பத்தாறு தத்துவங்களுக்கும் கண்டு கொள்க. இவை மாயா மலத்தின்பாற்படுவன. இவற்றாலே தநுகரண புவன போகங்களை உயிர்களின்பொருட்டு இறைவன் ஆக்கித்தந்து உயிர்களைக் கன்மம் புசித்துக் கழிக்கச் செய்கிறார்.

2. **ஆணவ மலம்** :—அறியாமை உருவமானது. உயிரை அநாதியே மறைப்பது.

3. **கன்மம்** :—வினை - சுகதுக்க உருவமானது.

இதுவரை மும்மலங்களைப் பற்றிப் பேசினர். இவை முப்பொருள்களுட் பாசம் எனப்படும்.

4. **பசு** :—இனி முப்பொருள்களுட் பசு என்பது பற்றிச் சொல்கிறார்.

பசுவின் தன்மை : அசித்தின் முன் சித்துப் பொருந் தாது. சித்தை அசித்து அறியாது. சித்தையும் அசித்தையும் அறிவது ஆன்மாவே. 36 தத்துவங்களும் தம்மைத் தாம் அறியா. அஃதெப்படி யென்னில் ? ஆறுசுவைகளும் தம்மைத் தாமின்ன வென்றறியா. அவற்றை அருந்தி வேறொருவன் சொல்வதுபோலத் தத்துவங்களுள்ளே அறிவாய் ஒன்றொன்றாய் நாடியுணரும் பொருளானது ஆன்மாவாம்.

5. பதி :—பதியைப்பற்றி மூன்று உதாரணங்களால் விளக்குகிறார். (1) சூரியன் வேறாய் நின்று கண்ணுக்குக் காட்டுவதுபோல உயிர் அறிவுக்குள் நின்று அறிவித்திடுவது. (2) ஐம்பொறிகளும் ஆன்மாவினால் அறிவதுபோல ஆன்மாவுக்குள்ளே நின்று ஆன்ம அறிவோடு கலந்து அறிவித்து நிற்பது பதி. (3) எல்லா எழுத்துக்களுள்ளும் அகரவுயிர் கலந்து நிற்பதுபோல எல்லாவுயிர்களுள்ளும் உயிர்க்குயிராய் நிற்பது பதி.

6. (1) ஐந்தெழுத்தும் (2) அருள் நடமும் :—

(2) திருக்கூத்து : அகார உகாரங்களின் உருவான சிவலிங்கத்தினிடமாக சிவயநம என்னும் திருவெழுத்தஞ்சாலே சிவன் திருக் கூத்தாடுகின்றார். திருவடியில் நகரம் ; உதரத்தில் மகரம் ; முகத்தில் வகாரம், முடியில் யகரம். இது நமசிவய என்ற அமைப்பு (தூலபஞ்சாக்கரம்), லயாங்கம் என்று சொல்வர். துடியில் சிகரம் ; வீசுகரத்தில் வகரம் ; அபயகரத்தில் யகரம் ; ஏந்துகின்ற அக்கினியில் நகரம் ; அடிக்கீழ் முயலகனில் மகரம் : இது சிவயநம என்ற போகாங்கம் என்பர். சூக்கும பஞ்சாக்கரம்-திருவாசி ஓங்காரம். அதில் உள்ள சுடர்கள் 51 அக்கரங்கள்.

ஐந்தொழிலாவனவும் தியானிக்குமிடமும் : சிருட்டி துடியிலும், திதி அமைத்த கையிலும், சங்காரம் அக்கினியிலும், மறைப்பு (திரோதானம்) ஊன்றிய திருவடியிலும், அருள் (முத்தி) தூக்கிய திருவடியிலும் ஆவன - இவ்வகையில் தியானிக்கத்தக்கது. வீசுகரத்தால் மாயையை உதறுகிறார் ; அக்கினியால் வினையைச் சுடுகின்றார்; ஆணவ

மலத்தை ஊன்றிய திருவடியில் அமிழ்த்துகிறார் ; தூக்கிய திருவடியால் உயிர்களை மேலெடுக்கிறார். இவ்விதமாகத் தியானிக்கத்தக்கது. மோனமா முனிவர்கள் இவ்வானந்தக் கூத்தைக் கண்டு மும்மலம் நசிக்கப் பெறுகிறார்கள். இவ்வாறு பஞ்சாக்கரமாகிய அம்மையாருடனே கருணையுருக் கொண்டு ஆடும் திருக்கூத்தைக் கண்டவர்களுக்குப் பிறப்பு இல்லை.

1. திருவைந்தெழுத்து: ஐந்தெழுத்து அழியுமெழுத்தாகுமோ ? என்னின், குறிமட்டும் அழியும் பொருள் அழியாது. ஐந்தெழுத்தின் பொருளாவன : ஈசன், அருள், ஆவி, திரோதம், மலம் என்பனவாம். சிபஞ்சாக்கரத்தை நகர முதலாக நமசிவய என்று ஓதினால் அருள் நாடாது. சிகரம் முதலாகவைத்துச் சிவயநம என்று ஓதுதல் வேண்டும். நகர மகரங்களை முதலில்வைத்து ஓதினால் மும்மலம் தீரா ; மாறி ஓதினால் இன்பத்தே வாழலாம். உயிரை இருள்தீரச் சிவத்தினிடத்தே அருள் சேர்ப்பது என்பது ஐந்தெழுத்தின் பொருளாகும். ஐந்தெழுத்தே முத்தியாம். முத்தியை அடைந்தோர் பழத்திலிரதமும், போதில் மணமும், அக்கினியிற் சூடும், வீணையினாதமும் போலப் பொருந்துவர். கட்டப்பட்ட நிலையாகிய பெத்த நிலையில் தத்துவங்கள் நிற்கின்ற நிலை போல முத்தியினில் மலமற்றோர் பொருந்திடுவர். சூரியன்முன் சந்திரன் ஒளி மழுங்கியிருக்கின்றது போல நாதாந்தத்தில் இறைவன் திருவடியில் ஆன்மா அணைந்து தன் முனைப்பின்றி இன்பத்திலழுந்தி நிற்கும்.

முத்தியினில் ஆன்மா சிவத்தினிடத்திற் சென்று சேர்கிறதா ? அல்லது சிவம் வந்து அடைகிறதா ? என்றதொரு கேள்வி. அதற்கு அருமையான விடை கூறுகிறார் ஆசிரியர். ஆன்மா சென்றுசேர்கிறதென்றால் சிவத்தினுடைய பரிபூரண நிலைக்குப் பங்கம் வரும் ; சிவம் வந்தடைகிறதென்றால் சிவம் அந்நிய பதார்த்தமாகிறது. இவ்விரண்டுமல்லாத நிலை எது என்றால், கண்ணின் குற்றம் அகன்றால் சூரியன் நிற்கும் நிலை எதுவோ அதுபோலக் கொள்க என்கிறார். இதனையே "சென்றடையாத திரு" என்று தேவாரத்துள் அருளப்பட்ட

தென்க. எனவே உயிர் சென்று சேர்வதுமில்லை. சிவம் வந்தடைவதுமில்லை. பதி பசுபாசம் என்ற மூன்றும் நித்தமாகிய உள்பொருள்களேயாம். அப்படியாயின் முத்திநிலையில் இம்மூன்றும் உள்ளவாறெப்படியோ என்றால் முத்தியில் இன்பங் கொடுப்பவன் பதியாகிய இறைவன். அவ்வின்பத்தை அனுபவிப்பது ஆன்மா. தான் வலியற்று நிற்பதால் இவ்வின்பத்தை விளைவிப்பது - விளைவதற்குத் துணைசெய்வது - மலம் என்க. எப்படி யென்றால் ஒருவன் ஒரு ஸ்தாபனத்தைப் பெற ஆசைப்பட்டு முயல்கிறான். மற்றொருவன் போட்டியிட்டு அதற்குக் குறுக்கே நிற்கிறான். போட்டியிடுபவன் விலகிக் கொண்டு பின்வாங்கல் (withdraw) செய்துகொண்டால் எங்ஙனம் அந்தஸ்தானம் தானே வந்துவிடுமோ ? அதுபோலாகும். இம்முத்தி யின்பம் மாறாமல், அழியாமல், இருப்பதற்கு வழி என்ன என்றால் குருலிங்க சங்கமம் என்ற மூன்றிடத்திலும் செய்யும் வழிபாடே யாகும். இம்மூன்றிடத்திலும் கன்றீன்ற பசுவின் மனம்போலக் கசிந்து கசிந்து உருகி நின்றால் மும்மலம் வாதியாது முத்தியின்பம் நிலைக்கும்.

இவ்வாறு சிவாகமங்களுள் அருளப்பட்டது. முடித்துக் கூறுமிடத்து, ஆசிரியர் " வண்மைதருமாகம நூல் வைத்த பொருள் வழுவா உண்மை விளக்கம் " என்று தொடங்கியவாறே " வண்மை தரு மாகமநூல் வைத்தபொருள் வழுவா உண்மை விளக்கம் " என்று கூறி முடிக்கின்றார். எனவே இப்பொருள்கள் எல்லாம் சிவாகமங்களுட் கூறியருளப் பெற்றவை என்பதாயிற்று.

இந்நூலினுட் கூறும் பொருள்களை,

"ஆறாறு தத்துவமே ஆணவமே தன்றேதான்
மாறா வினையேது மற்றிவற்றின்—வேறாகா
நானேது நீயேது நாதனட மஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று "

என்று கூறி (1) 36 தத்துவங்கள், (2) ஆணவம், (3) வினை, (4) நான், (5) நீ, (6) நடமைந்தெழுத்து என்று ஆறு

பொருள்களைப்பற்றிக் கூறுவதாக அறுதியிட்டுக்கொண்டார். இவ்வாறு ஆறுபொருள்களைப்பற்றி மாணாக்கன் வினவுவதாகவும், தாம் அவற்றுக்கு முறையே விடையருள்வதாகவும் வைத்து நூலை முடிக்கின்றார். இவற்றுள் 36 தத்துவங்களாகிய மாயா மலமும் ஆணவமும், கன்மமும் என்ற பகுதிகளில் பாசத்தைப் பற்றிக் கூறப்பட்ட நான் என்பதில் பசு வியல்பு பேசப்பட்டது. நீ என்ற பகுதியில் பதி யியல்பு அருளப்பட்டது. இவற்றால் பாசம், - பசு, - பதி என்ற முப்பொருள் களினிலை கூறப்பட்டது. நாதனட மஞ்செழுத்து என்ற பகுதியில் சாதனமும் பயனும் சற்று விரிவாக அருளப்பட்டன. ஆணவம் கன்மம் என்பவற்றைச் சுருங்கக் கூறியுள்ளார்.

இவை திருமூலர் திருமந்திரத்திலும் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதகம், சித்தியார், சிவப்பிரகாசம் முதலிய நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் விரிவாகக் கூறப்பட்டவைகளைச் சங்கிரகமாகப் பாடஞ் சொல்லும் முறையில் சுருக்கி அளவுபடுத்திக் கூறியபெருமை ஆசிரியருக்குரியது. இதனைச் சைவசித்தாந்த முதற் பாடம் Primer of Saiva Siddhanta என்று சொல்லலாம். இது சிவஞான முனிவர் செய்த பூப்பிள்ளை அட்டவணை போன்ற செய்யுள் நூல். நான் சித்தாந்த பாடங்கள் கற்கத் தொடங்கியபோதே இந்நூலின் மேல் எனக்கு ஒரு கவர்ச்சி உண்டாகியது. நான் எனது அளவைக்கு ஏற்றபடி இந்நூலைச் சிலருக்குப் பாடமுங் கற்பித்துள்ளேன். வாழ்க உண்மை விளக்கம் !

---

சிவபூசை செய்து காட்டினார்கள். இரண்டு நாட்களும் மாலை சிவதீட்சை பெறவேண்டிய முக்கியத்துவத்தைப் பற்றியும் சிவபூசையால் அடையக்கூடிய பயனைப்பற்றியும் ஈசான சிவாசாரியர் சொற்பொழி வாற்றினார்கள். திரு. சோமசுந்தரத் தம்பிரானவர்கள் சில நியமங்களும் உணவு ஒழுக்கங்களும் வாழ்க்கையில் தானாக அமைந்து விடுகின்றனவென்றுசிவபூசையின்பலன்களை எடுத்தோதும் போது கூறினார்கள். சைவ சித்தாந்த மகா சமாஜ அங்கத்தினர்கள் பலர் சிவதீக்ஷை பெற்றுக்கொண்டனர்.

மதுரை நகர் - திரு ஆலவாய், **சைவ சித்தாந்த சபையின் இரண்டாவது மகாநாடு** விளம்பி ஆண்டு மார்கழி மாதம் 12, 13, 14-ம் நாட்களில் மதுரை ஸ்ரீமீனாட்சிசுந்தரேஸ்வரர் கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில் நடைபெற்றது.

**திருப்பாவை—திருவெம்பாவை மகாநாடு** : 27-12-58-ல் சனிக்கிழமையன்று உயர்திரு. எம். பக்தவத்சலம், அறநிலையப் பாதுகாப்பிலாகா அமைச்சர் அவர்கள் தலைமையில் தஞ்சாவூர் ஸ்ரீ பிரகதீஸ்வரர் ஆலயத்தில் நடைபெற்றது.

## ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள்

சுவாமிகள், சைவ சித்தாந்த மகா சமாஜத்தை முதன் முதலில் தமது மடத்தில் நிறுவி, சமாஜ ஆண்டு விழாக்களில் பல இடங்களில் தலைமை வகித்துச் சமாஜ முன்னேற்றத்திற்குப் பலவிதத்திலும் பணியாற்றி ஆசிர்வதித்துள்ளார்கள். அப்பெரியார் தம் பருவுடலை நீத்துப் பரமனடி சேர்ந்த நன்னாள் 24-1-59 சனிக்கிழமை தைப்பூசமாகும். அன்று, அவருடைய நினைவுகாரணமாக இவ்வாண்டு சமாஜத்தில் வெளியிட்டுள்ள "ஞானியார் நினைவு மலரில்" தொகுத்துள்ள அப்பெரியாரது கட்டுரைகளை ஆங்காங்குள்ள சைவ மக்களில்லங்கள்தோறும், மடங்கள்தோறும், சிவாலயங்கள்தோறும் படித்து நமது நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுவோமாக. அந்நன்னாள்வரை

# ஞானியார் அடிகள் நினைவு மலர்

ரூ. 1-50க்குக் கொடுக்கப்படும்.

கிடைக்குமிடம் :—

**சைவ சித்தாந்த மகா சமாஜப் புத்தக விற்பனை அலுவலகம்,**

28, இராமகிருஷ்ண மட் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

## சான்றோர் திருநட்சத்திரங்கள்

விளம்பி௵ தை௴ நாயன்மார்

8௨ (21-1-59) புதன்கிழமை—கண்ணப்பர் —மிருகசீரிடம்
9௨ (22-1-59) வியாழன்—அரிவாட்டாயர் —திருவாதிரை
15௨ (28-1-59) புதன்—சண்டேசுரர் —உத்திரம்
19௨ (1-2-59) ஞாயிறு—திருநீலகண்டர் —விசாகம்
27௨ (9-2-59) திங்கட்கிழமை—அப்பூதிஅடிகள் —சதயம்
30௨ (12-2-59) வியாழன்—கலிக்கம்ப நாயனர் —ரேவதி

சந்தான குரவர்

19௨ (1-2-59) ஞாயிறு—தாயுமானவசுவாமிகள்—விசாகம்

சைவப் பெரியார்

11௨ (24-1-59) சனிக்கிழமை—**ஞானியார் சுவாமிகள்**—பூசம்
15௨ (28-1-59) புதன்—திலகவதியார் —உத்திரம்
27௨ (9-2-59) திங்கட்கிழமை—திருப்போரூர் மௌன சுவாமிகள்—சதயம்
30௨ (12-2-59) வியாழக்கிழமை—அரதத்த சிவாசாரியார் —சுவாதி பஞ்சமி

## புத்தக விலைப்பட்டி

| | | ரூ. ந.பை | |
|---|---|---|---|
| பெரியபுராணம் | ... | 3 | 00 |
| திருப்போரூர்ச் சந்நிதிமுறை | ... | 0 | 75 |
| திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சி - சமாஜப் பொன்விழா வெளியீடு | ... | 1 | 00 |
| சமாஜப் பொன்விழா மலர் | ... | 0 | 50 |
| முருகன் மூந்நூல் உரையுடன் | ... | 0 | 40 |
| ஞானியார் அடிகள் நினைவு மலர் | ... | 2 | 00 |
| சிவஞான போதம் (எளிய உரை) | ... | 0 | 12 |
| குகார்ச்சனைத் திருமந்திரம் | ... | 0 | 06 |
| அறுபத்துமூவர் | ... | 0 | 06 |

தபாற்கூலி, ரிஜிஸ்தர் செலவு வேறு.

| | | |
|---|---|---|
| திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி(உரையுடன்) | 0 | 05 |
| ,, நூறு பிரதிகள் பதிவுத் தபாற்கூலியுள்பட | 6 | 25 |

**சமாஜ புத்தக விற்பனை அலுவலகம்**
28, இராமகிருஷ்ண மட் ரோடு, சென்னை-4

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D. Mangayarkarasi and V.K. Punithavathi, Edited by Pulavar Murugavel, M.O.L., & Published by S. Satchidanandam Pillai, B.A:, L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.